

பருத்தியிலே விளைந்திடும் கற்பனைகள் அற்புதமோ அதி அற்புதம்
மோஸ்தர்கள்
நாகரீகமான பிரிண்டுகள்... மதிமயக்கும் நெசவுநயம்...
விரும்பித் தேர்ந்தெடுக்க விதவிதம்.
இயற்கைச் சிறப்பிலே இணையற்றது பருத்தி.
ஸென்சுரி - 100% பருத்தித் துணிகள்
தி சென்சுரி ஸ்பின். அண்டு. மான்யு. கம். லிமிடெட், பம்பாய்-400 025
ADROIT/CM/534 P/TAM




# "ஸாப்பி"

## கடலை மிட்டாய்

சுவை, உணவுச் சக்தி,
முருமுருப்புத் தன்மையில்
இணையற்றது "ஸாப்பி."
இயல்பான புரதச்சத்து
நிறைந்த "ஸாப்பி"
வைடமின் A, B, B2,
இரும்பு, தாதுச்
சத்துக்களுடன் ஆன
தயாரிப்பு.

**20, 50, 100, 200 கிராம்
பொட்டலங்கள் கிடைக்கும்**

**தித்திக்கும் வேளையின்
திதிப்பான ஆகாரம்**




இது 'டால்மியா உத்யோகின்'
ஒரு தரமான தயாரிப்பு.



# கல்கி

## பொருளடக்கம்

பிரமாதீச, ஐப்பசி, 26 – நவம்பர் 11, '73



அட்டைப்பட நங்கை :

"கல்லில் நெறந்து கடமையில் உயர்ந்த நாட்டில் கண்டது கேட்டது நிறைந்தது நெஞ்சில்"

வண்ணப் புகைப்படம் : ரஸிஷ்

"கல்கி"யில் வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்ப வங்களும் கற் பனையே

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 33 • இதழ் 15

# பொருளாதாரம் திசை திரும்புகிறது?

நாட்டின் பொருளாதாரம் திசை திரும்ப ஆரம்பித்து விட்டது; முன்னேற்றத்துக்கான அறிகுறிகள் தோன்றியுள்ளன; எனவே இனி இது குறித்து மக்கள் கவலை கொள்ள வேண்டாம் என்று நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் பேசியிருக்கிறார் பிரதமர் இந்திரா காந்தி அம்மையார். உணவு உற்பத்தியில் சிறிது அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டியே இவ்விதம் அவர் பேசியுள்ளார்.

ஆனால் பொருளாதாரத்தில் சீர்கேடு அடைந்துள்ள பல அம்சங்களில், ஓர் அம்சத்தில் தோன்றியுள்ள தாற்காலிக முன்னேற்றத்தை ஆதாரமாக வைத்து அற்ப சந்தோஷப்படுவது சரியாகாது என்பதை மக்களுக்கு உணர்த்துவதற்காகத் தானோ என்னவோ, பிரதமர் பேசிய அதே தினத்தில் ரிஸர்வ் பாங்கி ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளது. இந்த நிதி — நாணய 72—73 ஆண்டு அறிக்கையில் பொருளாதாரத்தில் சீரழிந்துள்ள இனங்களைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டி, இவற்றைத் திருத்த என்ன செய்ய வேண்டும் என்பதையும் விளக்கியிருக்கிறது. முக்கியமாக மூன்று உண்மைகளை ரிசர்வ் பாங்கி அறிக்கை வலியுறுத்தியுள்ளது.

விலைவாசிகள் மிதமிஞ்சி உயர்ந்திருப்பது தாற்காலிக சம்பவம் என்றோ, பருவ நிலையை அனுசரித்துக் காணப்படும் சாதாரண தோற்றம்தான் என்றோ, உலகத்தில் எல்லாப் பாகங்களிலும் காணப்படும் விலை உயர்வைப் போலத்தான் நம் நாட்டிலும் ஏற்பட்டுள்ளது என்றோ இலேசாகத் தள்ளி விடக் கூடாது. அளவில்லாமல் நோட்டு அச்சிட்டு வழங்குவதாலும், உற்பத்திக்குச் சம்பந்தமில்லாத செலவுகள் தொடர்ந்து செய்யப்படுவதாலும் தான் நம் நாட்டில் விலைவாசிகள் உயர்ந்துள்ளன. இது அபாயகரமானது.

இதன் விளைவாகத் தொழில்களில் முதலீடு செய்வதிலும், புதுத் தொழில்கள் ஆரம்பிப்பதிலும் ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கும் தொழில்களை விரிவுபடுத்துவதிலும் தாமதம் ஏற்பட்டுள்ளது. தனியார்த் தொழில்கள், சர்க்கார்த் தொழில்கள் எல்லாவற்றிலும் விலை உயர்வினால் இந்த மந்தநிலை ஏற்பட்டுள்ளது. தொழில்கள் ஏறக்குறைய இரண்டு சதவீதம் என்று மிகக் குறைந்த அளவிலேயே வளர்ச்சி அடைந்து வருகின்றன.

குறைகளைச் சுட்டிக்காட்டிய அறிக்கை இதற்குப் பரிகாரத்தையும் சொல்லியிருக்கிறது. இரண்டை மட்டும் இங்கே குறிப்பிடுகிறோம். 1. ஊதாரிச் செலவுகளைக் குறைத்தே ஆக வேண்டும். இதற்கு அரசு உறுதியுடன் செயல்படத் தயங்கக் கூடாது. உற்பத்திக்கு நேரடியாக உபயோகமாகாத செலவுகளைச் செய்யக்கூடாது என்று அறிக்கை வலியுறுத்துகிறது. 2. உற்பத்தி உயர்வுக்காக இதுவரையில் செய்ததைவிட அதி தீவிரமாக நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். தொழில்களில் முதலீடுகளை அதிகரிக்கவும், தொழில் நுட்ப அறிவைப் பெருக்கவும், உற்பத்தித் திறனை உயர்த்தவும், உற்பத்தி முறைகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்தவும் வழிவகுக்க வேண்டும்.

இந்த எச்சரிக்கைகளையெல்லாம் பல தொழில் அதிபர்கள் பல சந்தர்ப்பங்களில் செய்திருக்கின்றனர். எனினும் அரசாங்கம் இதுவரையில் இவற்றைத் தீவிரமாகக் கவனித்ததாகத் தெரியவில்லை. 1972 — 73 ஆண்டுக்கான அறிக்கை என்றாலும், இதில் கண்டுள்ள எச்சரிக்கை இப்போதும்கூடப் பொருந்தும்.

இந்தத் தேக்க நிலையிலிருந்து சமீப காலத்தில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறதோ என்று எண்ண இடம் இருக்கிறது. தொழிலதிபர்களையும் நாட்டின் பொருளாதார வல்லுநர்களையும் தனித் தனிக் கோஷ்டியாகப் பிரதமர் அழைத்து, அவர்களுடைய கருத்துக்களை நேரிடையாகவே கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார். இம்மாதிரி அரசாங்கம் பிரபல தனியார்த் தொழிலதிபர்களைக் கலந்து ஆலோசனை நடத்தியதே நாட்டின் பொருளாதாரத்துக்கு ஒரு நல்ல திருப்பம் என்றுதான் கருத

வேண்டும். அரசாங்கத்தின் ஆதாரக் கொள்கைகளான சோஷலிஸக் கருத்துக்களுக்கு மாறுபடாத வகையில், தற்போதுள்ள மந்த நிலையிலிருந்து நாட்டின் பொருளாதாரத்தை முன்னேற்றமடையச் செய்யப் பிரதமர் முயல்கிறார். இதற்காக அமைச்சர்களின் ஆலோசனைகளைத் தவிர, மற்றவர்களுடைய அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்திக் கொள்ள இசைந்திருக்கிறார். இந்த மட்டுமாவது அவர் முன்வந்தது வரவேற்க வேண்டியதே.

இந்த ஆலோசனைகளிலிருந்து உருப்படியான பலன்கள் ஏற்பட்டிருப்பதாகக்கூடக் கருதலாம். தொழில்களுக்கு லைசென்சுகள் வழங்கப்படும் முறைகளில் தாமதத்தைத் தவிர்க்கவும், சுறுசுறுப்பை உண்டாக்கவும், செய்யப்பட்ட மாறுதல்களும், புது அமைப்புக்களும், இது வரையில் இத்துறையில் ஏற்பட்டிருந்த தேக்க நிலையிலிருந்து அபிவிருத்தியைத் தோற்றுவிக்கும் என்று எதிர்பார்க்கலாம். எப்படியும் 150 நாட்களுக்கு அதிகமாக எந்தத் தொழில் லைசென்சும் அரசாங்கக் காரியாலயத்தில் தூங்காது என்பது வருஷக்கணக்காகக் காத்திருந்து சோர்வுற்ற தொழிலதிபர்களுக்கு உற்சாகமளிக்கும்.

இந்தப் போக்கு நீடித்தால், நீடிப்பதற்கு இசைவான நடவடிக்கைகளை மேன்மேலும் அரசாங்கம் தொடர்ந்து எடுக்குமேயானால் நாட்டின் பொருளாதாரம் திசை திரும்பலாம்.

# போர்க் கருவிகளில் சமத்துவம்!

இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள போர்க் கருவிகளும் தளவாடங்களும் எல்லா வகையிலும் சமமாகவே இருக்க வேண்டும், இவற்றின் அளவில் ஏற்றத் தாழ்வு இருக்கக் கூடாது என்ற கருத்து அடிக்கடி தெரிவிக்கப்படுகிறது. முக்கியமாக பாகிஸ்தான் பிரதமர் அமெரிக்காவுக்குப் போகும்போதெல்லாம் இக்கருத்து வன்மையாக அரசியல் வட்டாரங்களில் வாதிக்கப்படுகிறது. நமது மத்திய அமைச்சர் ஸர்தார் ஸ்வரண்ஸிங் இக்கருத்துக்கு மறுப்புக் கூற நேர்ந்தது.

இந்தியா பாகிஸ்தானைக் காட்டிலும் விஸ்தீரணத்திலும் ஜனத்தொகையிலும் நான்கு ஐந்து மடங்கு பெரியது. இப்பரந்த தேசத்தின் நீண்ட கடற்கரைப் பகுதியையும், பாகிஸ்தான், சீனா இவ்விரு நாடுகளையும் ஒட்டியுள்ள நிலப்பரப்பையும் பாதுகாக்க வேண்டும். எதிர்பாராது ஏற்படக்கூடிய அபாயங்களையும் சமாளிக்க வேண்டும். இதற்கெல்லாம் தேவைப்படும் ராணுவ தளவாடங்களுக்கும், சிறிய நாடான பாகிஸ்தானுக்கு அவசியமாக இருக்கும் யுத்த தளவாடங்களுக்கும் எக்காலத்திலும் சமத்துவம் இருக்க முடியாது. ஒரு நாட்டின் ராணுவப் படை பலமும் அதன் அமைப்பும் அந்த நாட்டின் தேவையை அனுசரித்துத்தான் இருக்கும். அவ்விதம் இருப்பதுதான் முறை. இதைப் பிரதமர் இந்திராகாந்தி அம்மையாரும் சுட்டிக்காட்டியுள்ளார்கள்.

கடந்த காலங்களில் ஆயுத சமத்துவம் என்ற அபாயகரமான அடிப்படையில், பாகிஸ்தானுக்குத் தேவைக்கு அதிகமாக அமெரிக்கா ஆயுதங்கள் உதவி வந்திருக்கிறது. இந்தத் தவறான கருத்தை இனியேனும் அமெரிக்கா கைவிடுதல் அவசியமாகும்.

ஆயுதக் குவிப்புக்கு நாட்டின் வருமானத்தில் பெரும் பகுதி வீணாகப் போய்விடுகிறது என்பது எல்லோரும் ஒப்புக் கொள்ளுவது தான். அதற்காக ஆகும் செலவைக் குறைத்து, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்குச் செலவு செய்தால், மக்களின் நலம் ஓங்கும் என்பது உண்மையே. நட்புறவை அண்டை நாடுகளுடன் வளர்த்துக் கொள்வதன் மூலம் பாதுகாப்புச் செலவினங்களைக் குறைத்துக் கொள்வது சாத்தியம். அப்போதும் சீனாவும் பாகிஸ்தானும் எந்த அளவுக்குக் குறைத்துக் கொள்கின்றன என்று கணித்து, அதற்கேற்ப ஒரு குறிப்பிட்ட விகிதாசாரத்தின்படிதான் நாம் நமது பாதுகாப்புச் செலவைக் குறைத்துக்கொள்ள முடியுமேயொழிய ஆயுத சமத்துவத்துக்கு ஒப்ப முடியாது. அது இந்தியாவைப் பொறுத்தமட்டில் அர்த்தமற்றது, அபாயம் நிறைந்தது.



கன்னடப் பத்திரிகையாளர் ஸ்ரீ டி. டி. சர்மா (திருமலை தாத்தாச்சாரிய சர்மா) தமது 73வது வயதில் பெங்களூரில் காலமானார் என்ற செய்தி வருத்தமளிப்பதாகும். திரு சர்மா கன்னடப் பத்திரிகையுலகின் பிதா என்று போற்றப்பட்டு வந்தார். அவர் தேச பக்திக் கனல் பறக்க நடத்தி வந்த ''விச்வ கர்நாடக'' என்ற பத்திரிகை அந்த நாட்களில் எத்தனையோ இன்னல்களையும் இடையூறுகளையும் தாங்கி ஈடு கொடுத்து வந்திருக்கிறது. சர்மாவின் தேசபக்திக் கட்டுரைகள் கர்நாடக மக்களை வீறுகொண்டு எழச் செய்தன. அதே சமயம் அன்றைய அரசாங்கத்தின் கெடுபிடிகளுக்கும் ஆளாயின. ஆனாலும் அவர் தம் உறுதியில் தளரவில்லை. அத்தகைய சிறந்த தேசபக்தரைக் கர்நாடக மாநிலம் இழந்து விட்டதானது ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும்.


காளி! மகமாயி! பகவதி! குறி சொல்லு தாயே! சுபிட்சம் வருது! பொருளாதாரம் அடுத்த மாதம் சீர்ப்படுது!
நீ குறி சொல்றதெல்லாம் நல்லாத்தான் இருக்கு, ஆனா அந்த மண்டையோட்டைப் பார்க்கறச்சே-தான் பயமாயிருக்கு!
இந்திரா
மக்கள்


பாரு, இனிமே எப்படி ஓடப் போகுதுன்னு!
உதைக்குமே தவிர குதிரையா மாறுமோ?
சுப்பிரமணியம்
பர்மிட்-லைசென்ஸ் முறை
லைசென்ஸ் வழங்க 150 நாள் கெடு
பொதுஜனம்

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## அரசாங்கத்துக்கு ஒரு பாடம்

சுப்ரீம் கோர்ட்டில் ராயப்பா வழக்கில் தாங்கள் அவருக்கு 'உதவி செய்ததற்காகத் தங்களைத் தமிழ்நாடு அரசு திடீரென்று விரிவுரையாளர்கள் பதவியிலிருந்து நீக்கியதாகக் கூறி, அரசு பிறப்பித்த உத்தரவை எதிர்த்துச் சட்டக் கல்லூரிப் பகுதி நேர விரிவுரையாளர்களான செல்வராஜும், சங்கரராமகிருஷ்ணனும் சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்திருந்த மனுக்களை ஏற்று விசாரித்த நீதிபதி எம். எம். இஸ்மாயில் அரசாங்க உத்தரவு செல்லாது என்று தள்ளுபடி செய்து தீர்ப்பளித்திருக்கிறார். விரிவுரையாளர்களுக்கு நியாயம் கிடைத்து விட்டது.

''அரசாங்கத்தின் வேலை நீக்க உத்தரவில் (வேலை நீக்கத்துக்கு) எந்தவிதமான காரணமும் காட்ட வேண்டிய அவசியம் இல்லை என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையினால் பல தாற்காலிகமான பகுதி நேர விரிவுரையாளர்களில் தங்களை மட்டுமே தனித்து எதேச்சாதிகாரமாக அரசு நீக்கியிருக்கிறது என மனுதாரர்கள் கூறியிருக்கும் புகாருக்குப் பதில் இல்லாமல் போகிறது. ஆகவே அரசாங்க உத்தரவைத் தள்ளுபடி செய்கிறேன்'' என்று கூறிய நீதிபதி மேலும் தம்முடைய தீர்ப்பில் சட்டக் கல்லூரி விரிவுரையாளர்கள் நியமனத்துக்குத் தற்போது கையாளப்படும் முறைகளைக் குறித்தும் தம்முடைய மனவருத்தத்தைத் தெரிவித்திருக்கிறார்:

''முன் காலத்தில் எல்லாம் ஆழமாகவும் விரிவாகவும் படித்துக் குறை காண முடியாத நாணயமும், ஒழுக்கமும், நற்குணமும் உள்ளவர்களைத் தேடித்தான் பகுதி நேர விரிவுரையாளர்களாக நியமிப்பது வழக்கம். அவர்களுடைய சொல் திறனையும் ஞானத் தெளிவையும் கற்பிக்கும் சாமர்த்தியத்தையும் கண்டு படிக்கிற மாணவர்கள் அவர்களிடம் மிகுந்த மரியாதையாகவும், பணிவாகவும் நடந்து கொள்வார்கள். ஒழுக்கமும், நன்னடத்தையும், திறமையும் உள்ள அந்த ஆசிரியர்களால் நூற்றுக்கணக்கான மாணவர்கள் உள்ள அந்த வகுப்புகளை ஒரு சிறிய அநாவசிய சத்தம் கூடக் கேட்காமல் அமைதியாக நடத்திச் செல்ல முடிந்தது. ஆனால் தற்போதுள்ள நிலைமையோ பரிதாபமானது. சட்டக் கல்லூரி ஏராளமான தாற்காலிக ஆசிரியர்களைக் கொண்டு நடத்தப்படுகிறது. இது சென்னை சட்டக் கல்லூரிக்கு மட்டுமுள்ள நிலைமை அல்ல என்பதை வேண்டுமானால் ஆறுதலாகக் கூறிக் கொள்ளலாம்.''

நீதிபதியின் தீர்ப்பில் உள்ள மேற்கண்ட விவரங்கள் எந்த ஓர் அரசாங்கத் துறைக்கும் சரியான பாடமாக இருக்கும் என்று தோன்றுகிறது.

## 'பொய் உற்பத்திப் பண்ணை'

சென்னையிலுள்ள லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் சென்ற மாத இறுதியில் ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்களின் படத்தைத் திறந்து வைத்து திரு காமராஜ் அவர்கள் இன்றுள்ள அரசியல் நிலைமை பற்றி அருமையாக விமர்சித்துப் பேசியிருக்கிறார்.

''ஜெயப்பிரகாஷ் சத்தியமான — உத்தமமான தேசபக்தர். மனித சமூக நல்வாழ்வுக்காக மனப்பூர்வமான சேவை செய்கிறவர். இன்று அவர் அரசியலிலிருந்து விலகிவிட்டார், ஒதுங்கிவிட்டார் என்று கூறுவது அவ்வளவாகப் பொருத்தமாயிராது. அரசியல் என்று நான் குறிப்பிடும்போது இந்தக் காலத்து அரசியலைப் பற்றி நான் சொல்லவில்லை. பதவியைக் காப்பாற்றிக் கொள்ள எதையும் செய்வது, எப்படியும் பணம் சம்பாதிப்பது என்பதுதான் இந்தக் கால அரசியலாக இருந்து வருகிறது. இதனால் அரசியல் என்று சொன்னாலே இப்போதெல்லாம் மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டு வருகிறது. தவறு செய்வது, அதை மறைப்பதற்குக் கூசாமல் பொய் சொல்வது, முறையற்ற வழிகளில் பணம் சம்பாதிப்பது என்ற நிலைமை இப்போது ஏற்பட்டுவிட்டது. கோழிப் பண்ணை, ஆட்டுப் பண்ணை, மாட்டுப் பண்ணை போல் அரசியல் என்பது ஒரு பொய் உற்பத்திப் பண்ணையாகிக் கொண்டு வருகிறது. செல்வாக்குப் பெறுவதற்காகப் பொய் சொல்லியே தீரவேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ள பரிதாப நிலையை இன்றைய அரசியலில் காண்கிறோம். இப்படிப்பட்ட பொய் பேசும் அரசியல்வாதிகளுக்கு நேர் மாறான சத்திய வாழ்வை ஜெயப்பிரகாஷ் வாழ்ந்து காட்டுவது பலருக்கு ஆத்திரமாக இருக்கலாம். ஜெயப்பிரகாஷைப் போல் உயர்ந்த லட்சியப் பிடிப்புக் கொண்டவர்கள் தேசத்துக்கு நல்வழி காட்டக்கூடிய பொறுப்பை ஏற்க வேண்டிய காலகட்டத்தில் இன்று நாம் இருக்கிறோம்'' என்பது திரு காமராஜ் அவர்கள் ஜெயப்பிரகாஷ் படத்தைத் திறந்து வைத்துப் பேசியதன் சாரமாகும். திரு காமராஜ் போன்ற மூத்த தலைவர்களே 'பொய் உற்பத்திப் பண்ணை' என்று விமரிசிக்குமளவு இன்றைய அரசியல் தரம் கெட்டுப் போயிருப்பது உண்மைதான்.

## அரசுடைமைப் பயமுறுத்தல்

தேசியமயமாக்குதல், அரசுடைமையாக்குதல் என்பது தமிழ்நாடு முதல்வருக்கு இப்போது ஒரு பயமுறுத்தல் ஆயுதமாகவே பயன்படுகிறது போலும். திடீரென்று சினிமாத் தியேட்டர்கள், ஸ்டுடியோக்களை அரசுடைமை ஆக்குவது பற்றி யோசித்து வருவதாகப் பேசியிருக்கிறார் அவர். தற்போது அவரது பிரதான எதிரியாக இருப்பவர் ஒரு பிரபல சினிமா நடிகர் — ஸ்டுடியோ அதிபர் — என்பதனாலேயே முதல்வருக்குத் தியேட்டர்கள்மீதும் ஸ்டுடியோக்களின் மீதும் கோபமோ என்பதாகப் பொதுமக்கள் இதைப் பற்றி நினைக்கவும், பேசவும், விமரிசிக்கவும் செய்கிறார்கள். அரசுடைமை ஆக்காமலேயே போதுமான சீரழிவும், தரக் குறைவும், தேக்கமும், குழப்ப

மும் உள்ள துறையாகத் திரைப்படத் துறை இருக்கிறது. அரசுடைமை ஆக்கி அதை இன்னும் மோசமாக்க வேண்டியது அவசியந் தானா? அது ஒருபுறமிருக்க, திரைப்படத் துறையை அரசுடைமையாக்குவது அரசியல் சாஸனம் உறுதி கூறியுள்ள அடிப்படை உரிமைகளைப் பறிப்பதாகவே அமையும். ஆனால் அரசியல் சாஸனத்தை அலட்சியம் செய்யும் அரசைத்தானே துரதிர்ஷ்டவசமாய் நாம் மத்தியிலும் மாநிலத்திலும் பெற்றிருக்கிறோம்!

## கொத்தவால்சாவடியும் குப்பை மலைகளும்

சென்னை நகரிலுள்ள மிக முக்கிய வியாபார மையமான கொத்தவால்சாவடி—மலையப் பெருமாள் தெருவில் ஒரு 'மலை' உண்டாகி இருக்கிறது. பூகம்பம் எதுவும் நடக்காமலே உண்டான மலை அது. கடந்த பல நாட்களாகக் கார்ப்பொரேஷன் லாரிகளால் அள்ளாமல் விடப்பட்ட குப்பைதான் அப்படி மலையாகக் குவிந்திருக்கிறது. அந்தக் குப்பை மலையில் மழைக் காலத்தில் ஆறுகள் சேறுகள் உற்பத்தியாகிப் பெருகி அதனால் பல நோய்கள் பரவும் அபாயமும் உண்டு. குப்பை மலை மேலேயே நடக்க வேண்டிய நிர்ப்பந்தம், வியாபாரம் செய்ய வேண்டிய கட்டாயம் எல்லாம்கூட ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையில் குப்பை மலையால் ஏற்பட்ட துர்நாற்றம் அப்பகுதியில் இருப்பவர்களால் சகித்துக் கொள்ள முடியாத எல்லைக்குப் போய்விட்டது. அப்பகுதி வியாபாரிகள் சங்கம், ''இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் அந்தக் குப்பை மலையை அகற்றாவிட்டால் கடையடைப்புச் செய்து கார்ப்பொரேஷன் அலுவலகம் முன் மறியல் நடத்தப் போவதாக'' முடிவு எடுத்து எச்சரித்த பின்பே கார்ப்பொரேஷன் அதிகாரிகள் குப்பை மலையை அகற்ற முன்வந்திருக்கிறார்கள்.

இருபது மாநகராட்சி ஊழியர்களும் மூன்று குப்பை லாரிகளும் மேற்படி 'மலைக்கு' அனுப்பப்பட்டிருப்பதாகவும், மாலைக்குள்ளோ, இரவுக்குள்ளோ எப்படியும் குப்பை மலை கரைந்துவிடும் என்பதாகவும் அக்டோபர் 30ந் தேதி மாநகராட்சிக் கமிஷனர் அலுவலகம் தெரிவித்திருக்கிறது. சில சமயங்களில் எலியைப் பிடிக்காமலே மலையைக் கெல்லி எறிய வேண்டியிருக்கிறது.

## விசாரணைக்குழு அறிக்கை எங்கே?

திருச்சி கிளைவ் விடுதியில் நடந்த அசம்பாவிதங்கள் குறித்து விசாரணை முடிந்து பல நாட்களாகியும் அந்த விசாரணைக் குழுவின் அறிக்கை இன்றுவரை வெளியிடப்படவில்லை. திருச்சியில் மாணவர்கள் கூட்டத்தில் பேசும் போது திரு காமராஜ் இது பற்றி வருத்தப்பட்டிருக்கிறார். ''அநேக விசாரணைக் கமிஷன்களின் அறிக்கைகள் கிடப்பில் போடப்பட்டுள்ளன. இங்கே நடந்த கிளைவ் ஹாஸ்டல் சம்பவங்களுக்காக நியமிக்கப்பட்ட விசாரணைக் குழுவின் அறிக்கைக்கும் அதே கதி ஏற்பட்டுவிடக் கூடாது. அமைதியாகப் படிப்பில் கவனம் செலுத்தி வந்த கிளைவ் ஹாஸ்டல் மாணவர்கள் காட்டுமிராண்டித்தனமான தாக்குதலுக்கு ஆளானது மிகவும் வருந்தத்தக்கது'' என்று கூறியிருக்கிறார் அவர். விசாரணைக் கமிஷன் அறிக்கைகள் தருவதும்

## ராஜாஜி சிந்தனை

தீய எண்ணங்கள், ஆபாசமான பேச்சு, நடத்தை, சுயநலச் சுரண்டல் ஆகியவற்றை மௌனமாக ஆனால் உறுதியாக எதிர்த்துப் போராடுவோம். நம்முடைய குழந்தைகளுக்கு நாம் செய்து அளிக்கக் கூடிய வேறு எதையும் விடச்சிறந்த முறையில், நமது ராஜ்யத்தின் நல்ல பெயர் அவர்களுக்குப் பயன்படும் என்பதை ஒவ்வொரு தாயும், தந்தையும் உணர்ந்து மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். நாம் இழந்து விட்டதாக எண்ணி நாம் அஞ்சும் இந்த நல்ல பெயரை மீண்டும் பெறப் பாடுபடுவோம். தனி நபர்களுடைய நடத்தையைப் பொறுத்துத்தான் ராஜ்யத்தின் பெருமை இருக்கிறது. தனி நபர் நடத்தை என்பது நம் ஒவ்வொருவர் கையிலும் உள்ள பொறுப்பாகும். எப்போதும், எங்கும் கடவுள் இருக்கிறார் என்பதை உணர்ந்து நடப்போம். இது உண்மை. கட்டுக்கதையல்ல. மற்றவருடைய கருத்தையும் கேளாமல் ஒருவரைப் பற்றிக் கூறப்படும் எதையும் நம்ப வேண்டாம். பொறுப்புள்ள ஒவ்வொரு பிரஜையும் தன்னை அடிப்படையான நியாய விதிகளுக்குக் கட்டுப்பட்ட நீதிபதியாகக் கருத வேண்டும். ஒருவரையொருவர் தூற்றித் திரியாமல் இருப்போம். மற்றவர்களைத் தூற்றுவது பொதுச் சேவையாகாது. நம்முடைய முயற்சிகளனைத்தும் நம்மை நாமே உயர்த்திக் கொள்வதில் இருக்க வேண்டும். மற்றவர்களைத் தாழ்த்துவதற்கல்ல.

அவற்றைக் கிடப்பில் போடுவதுமே இங்கு ஒரு புது மரபாகி வருகிறது என்பதையே அவருடைய பேச்சு சுட்டிக்காட்டியிருக்கிறது.

## ரிக்ஷாக்களும் கரண்டியும்

முதலமைச்சரின் பிறந்த நாளை ஒட்டிக் கை ரிக்ஷா இழுப்பவர்களுக்கு வழங்கப்பட்ட சைக்கிள் ரிக்ஷாக்களில் எல்லாம் பின்புறம் அண்ணாத்துரை படமும் கலைஞர் படமும் அடங்கிய வட்டத் தகரத் தகடு ஒன்று பதிக்கப்பட்டிருந்தது. ஆனால் இந்த ரிக்ஷாக்கள் வழங்கப்பட்ட சில தினங்களிலேயே கலைஞர் படம் காணப்படவில்லை. கலைஞர் மேல் தங்களுக்குள்ள அதிருப்தி காரணமாக ரிக்ஷாக்காரர்கள் அதை அழித்து விட்டார்கள் என்றும், கரண்டி எடுத்துவிட்டார்கள் என்றும் இதற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன.

இதில் வேடிக்கை என்னவென்றால் கலைஞர் படம் மங்கலாகக் காணப்படுகிற அல்லது இல்லாத ரிக்ஷாக்களைச் சென்னை நகரப் போக்குவரத்து போலீஸார் பல்வேறு குற்றங்களைச் சொல்லிப் பிடிக்கிறார்கள் என்று கூறப்படுவது தான். இது பற்றிச் சில பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகியுள்ளன.

இது உண்மையானால் முதலமைச்சரின் பிறந்த நாள் தர்மம் என்பது அவரது படத்துக்காகவே என்பது இதன் மூலம் ஓரளவு பச்சையாகவே நிரூபணமாவதுபோல் தெரியவில்லையா? அந்தப் படம் தானாகவே அழிந்தால்கூடச் சொந்தச் செலவில் அதற்கு வர்ணம் தீட்டிப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும் போலும்! இல்லாவிட்டால் ஆபத்துத்தான்.

## ரா. கி. நாயுடு அமரரானார்

முன்னாள் த. நா. கா. க. தலைவரும் சிறந்த தேசபக்தருமான ஸ்ரீவில்லிபுத்தூர் ராமச்சந்திரபுரம் கிருஷ்ணசாமி நாயுடு காலமாகிவிட்டார். தெற்கு மாவட்டங்களில் எங்கு சென்றாலும் 'ராவன்னாக் கீனா' என்ற இரண்டு எழுத்துக்களைச் சொன்ன மாத்திரத்திலேயே புரியும் அளவு அவர் பிரபலமாகி இருந்தார். நல்ல தமிழறிஞரான திரு ரா.கி. நாயுடு அவர்கள் சமூகநலப் பணிகளை நிறையச் செய்துள்ளார். சட்டசபை உறுப்பினராகவும், மேலவை உறுப்பினராகவும் பணிபுரிந்துள்ள திரு நாயுடு அவர்களின் மறைவு தேசபக்தர்களுக்குப் பேரிழப்பு என்றே சொல்லலாம். நாயுடு அவர்களின் மறைவால் வருந்தும் அவரது குடும்பத்தினருக்கும் தேசியத் தோழர்களுக்கும் மனமார்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.






இந்துக்களுக்கு மட்டுமின்றி எல்லா மதத்தினருக்கும் ஏற்றதான ஒரு வாழ்க்கை நெறியைப் போதிப்பதாகக் கீதை அமைந்திருப்பதால்தான் அண்ணல் காந்தியடிகள் தமது அன்றாடப் பிரார்த்தனைக் கூட்டங்களில் "ஈச்வர அல்லா தேரேநாம்" என்று பாடியதோடு கீதை சுலோகங்களையும் எடுத்தோதினார்.

'கடமையைச் செய்; பலனைக் கருதாதே' என்னும் போது கீதை அடங்கி ஒடுங்கிப் போகுமாறு பணிக்கவில்லை. அதர்மத்தைக் கண்டு வெகுண்டு எழவும் அது கற்றுத் தருகிறது. 'குறிப்பிட்ட காரியத்தைச் செய்பவனே என்னி மனம் கலங்காதே. செய்யப்படும் காரியத்தைக் கவனித்து அதற்கேற்ப இயங்கு' என்றும் விதிக்கிறது. செய்வன அனைத்தையும் பகவான் உடனிருப்பதாக எண்ணி, அவனது கருவியாக நாம் இருந்து இயங்குவதாகக் கருதிச் செய்தால் தவறு இழைக்கப் பிரமேயமில்லை என்று உணர்த்துகிறது. பக்திமானுக்கு உய்வுண்டு என்று உறுதியளிக்கிறது.

சேதுக் கடலில் வந்து கலக்கும் ஆறுகளாக அதற்கு வியாக்கியானங்கள், விரிவுரைகள் ஏராளமாக உள்ளன. ரேதுஸ்தாசிரமத்தில் அன்றாட விசாரங்களில் ஆழ்ந்து கிடக்கும் எண்ணற்றவர்கள் கீதோபதேசத்தின்படி நடந்து கொண்டால் கவலைகள் நீங்கி மனம் நிம்மதி பெறுவதை பிரத்யட்சமாகக் காணலாம். ஆனால் இன்றைய அவசர யுகத்தில் கீதையின் எழுநூறு சுலோகங்களையோ அதற்கான விரிவுரைகளையோ படிக்க அவகாசம் ஏது?

இதை முன்னிட்டுத்தான் பிரும்மஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் கீதோபதேசத்தை ஒரு நீண்ட நேர ஸ்டீரியோ இசைத்தட்டில் சங்கீத உபன்யாசமாக வழங்கியிருக்கிறார். கணீரென்ற குரலில் கம்பீரமான கர்நாடக ராகங்களில் முக்கிய சுலோகங்கள் பல ஒலிக்கின்றன. வியாக்யானங்கள் எளிமையாக எவருக்கும் இதயத்தில் நிலைப்பதாக அமைந்துள்ளன. வேடிக்கைக் கதைகள் கூறி 'கன'த்தைக் குறைக்கவுமில்லை; வறட்டுத் தத்துவமாய்ப் பேசி கனாரஸ்யம் குன்றுமாறும் செய்யவில்லை. இரண்டுக்கும் இடைப்பட்ட ஒரு நடையைக் கையாண்ட பிரும்மஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகள் விசுவரூப தரிசனத்தை உணர்ச்சி வசப்பட்டு வர்ணிக்கும் போது அர்ஜுனனுக்குக் கிட்டிய அதிர்ஷ்டம் நமக்கும் வாய்த்து விட்டது போலவே ஒரு பிரமை ஏற்படப் புளகாங்கிதமடைகிறோம்!



# காமாக்ஷியின் சிவப்பு

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

கரும்பு வில்லும் புஷ்ப பாணமும் தரித்து சமஸ்த லோகத்துக்கும் அனுக்கிரகம் செய்கிற திவ்விய மாதாதான் காமாக்ஷி. சகல ஜீவராசிகளையும் இந்திரிய சேஷ்டையிலிருந்து விடுவிப்பதற்காக மலர் அம்பும், மனஸின் ஆட்டங்களிலிருந்து விடுவிப்பதற்காகக் கரும்பாலான தனுசையும் தாங்கியிருக்கிறாள். இதில் வேடிக்கை என்னவென்றால் மன்மதனும் இதே போல் கரும்பு வில்லையும், புஷ்பத்தாலான ஐந்து பாணங்களையும்தான் வைத்திருக்கிறான். அவனுடைய காரியமோ அம்பாளுடைய காரியத்துக்கு நேர் விரோதமானது. அவன் இந்த வில்லையும், அம்பையும் வைத்துக்கொண்டுதான் சமஸ்தப் பிராணிகளுக்கும் இந்திரிய விகாரத்தை — அடங்காத காம வேகத்தை— உண்டாக்கி வருகிறான்.

அதுவும் பராசக்தியான அம்பாளுடைய லீலைதான். அவள்தான் மன்மதனுக்கு இப்படிப்பட்ட சக்தியை அனுக்கிரகம் செய்திருக்கிறாள். பிஞ்சு கசப்பாக இருந்து, பிறகு துவர்ப்பாகி, அப்புறம் புளிப்பாகி, கடைசியில் பரம மதுரமாகப் பழுக்கிறமாதிரி ஜீவர்களும் படிப்படியாகப் பலவித அநுபவங்களில் முன்னேறி முன்னேறிக் கடைசியில் பழமாகப் பக்குவமாக வேண்டும் என்பதற்கே அம்பாள் பிரகிருதி நியதிகளை — இயற்கை வேகங்களை— உண்டாக்கியிருக்கிறாள். ஒரேயடியாக இவற்றில் அடித்துச் செல்லப்படுவதற்கு நாம் இடம் தந்துவிடக் கூடாது; ஒரேயடியாக எடுத்த எடுப்பில் இந்த வேகங்களிலிருந்து தப்ப முடியாவிட்டால் அதற்காக வருத்தப்பட்டு மனமுடைந்து விடவும் கூடாது. அம்பாளைத் தஞ்சம் புகுந்தால் படிப்படியாக அவள் வழிகாட்டி விடுதலை தருவாள் என்ற நம்பிக்கையோடு வேகங்களைக் குறைத்துக்கொள்ள அவளைப் பிரார்த்திக்க வேண்டும். சம்ஸாரம் என்பதில் ஈடுபட்டிருக்கும்போதே இதில் ஏதாவது சாரம் இருக்கிறதா என்றும் அடிக்கடி சிந்தித்து வரவேண்டும். இப்படிச் சிந்திப்பதே ஒரு சாரம்தான். அதனால்தான் சம்சாரத்திலிருந்து விடுபடுகிற விரக்தி உண்டாகிறது. அந்தந்தக் காலத்தில் அந்தந்தப் பிரகிருதி வேகங்கள் — இயற்கை உந்தல்கள் — ஏற்பட்டாலும் அதனால் மனம் கலங்காமல், பராசக்தியைப் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தால் பிஞ்சு காயாகி, காய் கனியாகி, கனிதானே முற்றி மரத்திலிருந்து இற்று விழுந்துவிடுவது போல் கடைசியில் சம்சார விருட்சத்திலிருந்து விடுபட்டு அம்பாளின் சரணாரவிந்தத்தில் விழுவோம்.

நம்மைப் போல் எத்தனையோ பிராணிகள் ஏகப்பட்ட பூர்வ கர்மாவைச் செய்து குவித்திருக்கின்றன. இந்தக் கர்மாவைக் கழித்துக் கொள்ள அவையெல்லாம் ஜன்மா எடுத்தாக வேண்டும். எடுக்கிற ஜன்மாவில் கர்ம மூட்டையை ஜாஸ்தியாக்கிக் கொள்ளலாம்: அல்லது குறைத்தும் கொள்ளலாம். கர்மாவைக் கழித்துக் கொள்ள வேண்டுமானால் ஜன்மா எடுத்து அதைத் தர்ம வழியில் பிரயோஜனப்படுத்திக் கொள்வது தவிர வேறு வழியில்லை. கடைசியில் கர்மம் முழுதும் அழிந்தால் பிறப்பே இல்லாத நிலை அடைவோம். ஜீவர்களுக்கு ஜனன நிவிருத்தி உண்டாவதற்கே ஒரு பயிற்சிக் கூடமாக அவர்கள் ஜன்மம் எடுத்தாக வேண்டியிருக்கிறது. இவ்வாறு ஜீவர்களுக்கு ஜன்மம் ஏற்படுவதற்காகத்தான் அம்பாள் காமத்தை வைத்திருக்கிறாள்; அதற்கு அதிகாரியாக மன்மதனை நியமித்திருக்கிறாள்.

ஆனால் எதுவும் தன் எல்லையறிந்து அடங்கி நிற்க வேண்டும். அம்பிகை, பக்தர்களிடமும் ஞானிகளிடமும் மன்மதன் தன் கைவரிசையைக் காட்ட விடமாட்டாள். இவள்தான் மகாஞானியான பரமேசுவரனை மட்டும் தன்னிடம் பிரேமை கொள்ளுமாறும் செய்தவள். மன்மதன் அவரிடம் தன் கைவரிசையைக் காட்டப் பார்த்தான். அவர் நெற்றிக் கண்ணைத் திறந்து அவனை பஸ்மீகரமாக்கி விட்டார். அப்புறம் ஆடாமல், அசங்காமல், பிரம்மமாக அமர்ந்து விட்டார். அவர் அப்படியிருந்தால் அம்பாளுடைய பிரபஞ்ச லீலை எப்படி நடக்கும்? எனவே அவள் மன்மதனுடைய கரும்பு வில்லையும், புஷ்ப தனுசையும் தானே தன் கைகளில் எடுத்துக் கொண்டு பரமேசுவரன் முன் வந்தாள். மன்மதனைப் போல், 'அவரை ஜயிப்பேன்' என்று அகங்காரத்தோடு வரவில்லை. அன்போடு, அடக்கத்தோடு வந்தாள். உடனே பரம ஞானியான பரமேசுவரனும் காமேசுவரனாக மாறிவிட்டார். இவள் அன்பு பொங்குகிற கண்களால் காமாக்ஷியாகி, காமேசுவரியாகி, அவரைப் பார்க்க, அவரும் அன்பு மயமாகிக் காமேசுவரனாகிவிட்டார்.

பிரம்மமாகச் செயலற்று இருந்த வஸ்துவுக்கு லோகானுக்கிரகம் என்ற பரம கருணை உதிப்பதைத்தான் காமாக்ஷி என்று சொல்கிறோம். அப்போது சுத்த ஸ்படிக சங்காசமாக நிறமில்லாதிருந்த பிரம்மம், கருணையின் வர்ணமான ஜோதிர்மயமான சிவப்பு நிறத்தை அடைகிறது.

அன்பு, கருணை இவற்றைச் சிவப்பாகவே சொல்வது வழக்கம். ராகம் (அன்பு), அநுராகம் என்பதிலிருந்தே ரக்தம் (ரத்தம்) என்ற பதம் வந்தது. தமிழிலும் மனச் செம்மை, செவ்விய உள்ளம் என்றெல்லாம் சொல்கிறோம். இதுவே காமாக்ஷியின் சிவப்பு; கருணையின் வர்ணம்.

அடுத்த இதழில்: **கறுப்பும் சிவப்புமான காமாக்ஷி**

# ஒரு திரைக்கதை வளருகிறது...



"இருபத்தேழாவது சீன். வயல்வெளியில் காளைமாடு மேய்ந்து கொண்டிருக்கிறது. கதாநாயகியின் தந்தை குடியானவன். தன் காளை மாட்டைத் தேடி வருகிறான்.

"பிலிம் வில்லன் கிராமத்துப் பட்டா மணியம். அவன்தான் மாட்டை விரட்டி விட்டவன். ஏனென்றால், அவனுக்கு அந்தக் குடியானவனது வயது வந்த பெண்ணின் மீது ஒரு கண். அவளை அடைவதற்காக அவன் விதம் விதமான திரைப்படத் துயர்களைத் தரு கிறான்."

திரைக்கதை எழுதும் ஆசிரியன், கண்கள் இரண்டையும் இறுக மூடிக் கொண்டு எல்லா வற்றையும் கேட்டுக் கொண்டிருந்தவன், கதை முடிந்ததும் கண்களைத் திறந்தான். கொட்டாவி விட்டவண்ணம் படத் தயாரிப் பாளரைப் பார்த்துக் கேட்டான்: "எல்லாம் சரி! எதற்காகக் காளைமாடு காணமற்போன தாகக் காட்ட விரும்புகிறீர்கள் ?"

"நீ என்ன சொல்ல வருகிறாய்?"

"காளை மாட்டைக் காட்டிலும் பசு மாடு தான் பொருத்தம் என்று எனக்குப்படுகிறது. அதைத்தான் சொல்ல வந்தேன் !"

"குடியானவனுக்குக் காளை மாடுதானே பொருத்தம் ?"

"குடியானவனைத் தூக்கிக் குப்பையில் போடுங்கள்; 'கமர்ஷியல் வேல்யூ'வைப் பாருங்கள்! இப்பொழுதெல்லாம் காளை மாட்டைக் கண்டாலே மக்களுக்குப் பிடிக்க வில்லை; ஆத்திரம் ! அதன் 'இமேஜ்' போய் விட்டது. இப்பொழுது மக்களுக்குப் பசுவும் கன்றும்தான் மிகவும் பிடித்திருக்கின்றன. அத னால் சீனில் பசு காணமற் போய்விட்டதாகக் காட்டுங்கள். இது அன்னைமார்கள் — குழந் தைகள் ஆகியவர்களுடைய உணர்ச்சிகளைக் கிளறிவிடும். சீனுக்கே அது உயிர் கொடுக் கும்; பிரமாதமாக அமையும்!"

திரைக்கதை ஆசிரியன் கண்களை மூடிக் கொண்டு கற்பனையில் இறங்கினான்: "இங்கே பசு காணமற் போகிறது. அங்கே வீட்டிலே தாயைப் பிரிந்த கன்று கதறுகிறது. ஆகா ! எப்படி ?"

"கன்றின் கழுத்தைக் கட்டிக் கொண்டு ஹீரோயின் அழுவதாகக்கூடக் காட்டலாம் அல்லவா ?" — தயாரிப்பாளர் கேட்டார்.

புரொடக்ஷன் மானேஜர், உதவி டைரக் டர், காமிராமேன் மூவரும் ஒரு குரலில் கூறி னார்கள் : "பிரமாதம் ! உங்கள் 'பிரெய்ன்' பிரமாதம் ! சீன் ஒரு தூக்குத் தூக்கும்!"

திரைக்கதை ஆசிரியன் இருமினான். மீண்டும் விவாதம் தொடங்கியது.

" திரும்பவும் பசு எங்கே கிடைக்கிறது? அதாவது பசு எந்த இடத்தில் கிடைப்பதாகக் காட்ட வேண்டும்?" என்று கேட்டான்.

தயாரிப்பாளர் சிந்தித்தார் ; புரொடக் ஷன் மானேஜரைப் பார்த்தார்.

புரொடக்ஷன் மானேஜர் அவர் சிந்தனைக்கு முத்தாய்ப்பு வைத்தார்: "பசு காணமல் போகும் இடம் பாலக்காடு. ஆனால் திரும்பக் கிடைப்பது திருப்பதி. அப்படிக் காட்டுவது தான் நல்லது!" என்றார்.

எல்லோரும் வியப்பில் விரலைக் கடித்தனர்.

திரைக்கதை ஆசிரியன் கேட்டான்: "பாலக்காட்டுப் பசு திருப்பதிக்கு எப்படிப் போகுமாம்? காணமற் போகிற பசுக்கள் எ ல் லா ம் திருப்பதிக்குத்தான் போகின் றனவோ? இன்று திருப்பதியில் உள்ள பசுக்கள் அத்தனையும் எங்கெங்கோ காணமற் போனவைதானா ? பாலக்காட்டுக்கும் திருப்ப திக்கும் வெகு தொலைவு அப்பா !"

புரொடக்ஷன் மானேஜர் அமைதியாகக் கூறினார் : "நாம் காட்சிக்குக் 'கமர்ஷியல் வால்யூ' பார்க்கிறோம்; 'லாஜிக்' பார்க்க வில்லை. நம் படத்தைப் பார்ப்பவர்களில் பலர் பாலக்காட்டுக்குப் போக முடியாத வர்கள்; திருப்பதிக்கும் போக முடியாத வர்கள். அதனால் திருப்பதிக் காட்சியைச் சற்று விரிவாகக் காட்டினால் மக்களுக்குத் தீர்த்த யாத்திரை செய்து வைத்த புண்ணியம் நமக்குக் கிடைக்கும். புண்ணியத்துக்குப் புண்ணியம்; பணத்துக்குப் பணம் !"

" இவர் சொல்வது சரிதான். ஹீரோயி னின் தகப்பனுடைய பசு காணமற் போகிற தாகவும், அதைத் தேடிக் கொண்டு திருப் பதிக்குப் போகிறதாகவுமே காட்சியை அமைத்து விடு !" என்றார் தயாரிப்பாளர்.

" அப்புறம் ?"

"புல்வெளியில் பசு மேய்வதாகவே எழுதிக் கொள்!"

திரைக் கதை ஆசிரியன் குறித்துக் கொள்ளப் பேனாவைத் திறந்தான். அந்த நேரம் பார்த்துப் பத்திரிகையில் படித்தது அவனுக்கு நினைவு வந்தது: 'நாட்டில் தீவனப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதாகப் போட்டிருந் தானே, அது பொய்யாயிருக்குமா?'

எனவே, அவன் வாதம் செய்தான்: "புல்வெளியெல்லாம் கருகிப் புல்லே அற்று விட்டதாகச் செய்தி பிரசுரமாகியிருக் கிறது. வெற்றுவெளியில் புல் எங்கே இருக் கும்? அதனால் பசு வெளிநாட்டில் மேய்வ தாகக் காட்டிவிட்டால் என்ன? அந்நியச் செலாவணி விஷயம் சிரமம் தரும் என்றால் ஒன்று செய்வோம். திருப்பதி மலையிலே யாத் திரிகர்கள் கசக்கிப் போட்ட காகிதங்களைப் பசு தின்பதாகக் காட்டி விடுவோம்!"

தயாரிப்பாளர் யோசிக்கலானார். அங்கே அவர்கள் யூனிட்டின் பழைய கதாசிரியரும் உட்கார்ந்திருந்தார். அவர் நல்ல கதைக்கு மட்டமான ஸ்கிரிப்டும், மட்டமான கதைக்கு நல்ல ஸ்கிரிப்டும் எழுதுவதில் வல்லவர். அது காரணமாக எப்படியோ படம் ஓடிவிடும். இப்

பொழுது அவருக்கு வயது ஆகிவிட்டது. அதனால் யூனிட்டில் வெறும் ஆலோசகராக மட்டுமே பணியாற்றி வந்தார்.

''நமது பசு வெளிநாட்டுக்குப் போகாது. அது இந்தியப் புல்வெளியிலேயே பசும் புல் மேயும்!'' என்று அடித்துச் சொன்னார்.

'' அது எப்படி ?'' எல்லோரும் ஏககாலத்தில் அதிர்ந்து போய்க் கேட்டனர்.

அவர் சிரித்துக் கூறுவார் : ''ஒரிஸ்ஸாவில் பஞ்சம் என்றால் நமது அரசாங்கம் என்ன செய்கிறது? பஞ்சாபின் பசிய வயல்களை டாக்குமெண்டரியாகப் படம் பிடித்துக் காட்டி, ஒரிஸ்ஸா மக்களைப் பஞ்சம் பறந்து விட்டதாக நம்ப வைக்கிறது அல்லவா ? அதே போல், நாமும் இந்தியாவின் கட்டாந்தரைகளில்கூடப் பசும்புல் பெருகியிருப்பதாக ஏன் காட்டக்கூடாது? நீ எழுதிக் கொள், அப்பா! திருப்பதியின் மொட்டைப் பாறைகளில்கூடப் பசும் புல்லையே பசு மேய்வதாக! அதற்கு ஆச்சு, நமக்கு ஆச்சு ! பார்த்துக் கொள்வோம் !''

திரைக் கதை ஆசிரியன் குறித்துக் கொண்டான். இதற்குள் தேநீர் வந்தது. திரையில் இடைவேளை வருவது போல். எல்லோரும் தேநீரைப் பருகினர். தேநீர் பருகும்பொழுது யாருமே எதுவும் பேசவில்லை. எல்லோரும் காட்சியை மேலே கொண்டு போகவே நினைத்தனர். ஆனால் எப்படி ? அதுதான் அந்த நேரத்துக்கு எல்லோருடைய சிந்தனையுமாக இருந்தது.

தேநீர் அருந்தி முடித்ததும் எல்லோரும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டனர். ஒரு கை விரல்களோடு இன்னொரு கைவிரல்களைக் கோத்துப் பின்னல் வேலை செய்தனர். கால் பூட்ஸின் கூரிய முனையில் கண்களைப் பதித்தனர். அறையில் நன்லிரவின் அமைதி நிலவியது. சிறிது நேரம் கழித்து அந்த அமைதியைக் கலைத்தவர், யூனிட்டின் பழைய ரிடையர்டு கதாசிரியர்தான் .

'' எனக்கு ஓர் ஐடியா தோன்றுகிறது: இந்தக் காட்சியிலே ஓர் அழகான 'கட் சீனை'ப் புகுத்தலாம். பாராளுமன்றத்திலே, மூலப் பிரச்னைக்கு இடையே கவன ஈர்ப்புத் தீர்மானம் வருவது போல ! சொல்லச் சொன்னால் சொல்லுகிறேன் !''

''சொல்லு, சொல்லு!'' என்று தயாரிப்பாளர் வைக்கினார்.

அநுபவம் முதிர்ந்த கதாசிரியர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு கூறலுற்றார்: ''ஹீரோயினின் தந்தையினுடைய பசு காணாமற் போனதாக ஸீன் வருகிறது. அதனால் ஹீரோயினின் தந்தையே துயரப்படுவதாகக்



காட்டலாமே! துயரம் என்றால் சாதாரணத் துயரம் அல்ல; நிரையுலகத் துயரம். அந்தத் துயரம் எல்லை மீறவே, ஒரு தற்கொலை முயற்சிக் காட்சியை இடையில் செருகலாம். அதாவது ஹீரோயினின் தந்தை ராகவன் தனது டிராயிங் ரூமில் கூரையில் தொங்கும் விசிறியில் தொங்க முயல்வதாகக் காட்டலாம்!''

எல்லோரும் மந்திர வசப்பட்டவர்கள் போலக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

''....அவன் கழுத்தில் சுருக்குப் போட்டுக் கொள்ளப் போகும் வேளையிலே அவன் மகள் அங்கே வந்துவிடுகிறாள். கதவு இடுக்கு வழியாக அக்காட்சியைக் காண்கிறாள். அங்கிருந்தபடியே அலறுகிறாள். அப்புறம் கோபம் மீதூர ஒரு பாட்டுப் பாடுகிறாள். அந்தப் பாட்டின் வலுவில் உட்பக்கம் தாழிடப்பட்டிருந்த பூட்டு திறந்து கொள்ளுகிறது. உள்ளே ஓடித் தன் குடியானவத் தந்தையைக் கட்டிக் கொண்டு கதறுகிறாள். 'அப்பா! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? ஆண் பிள்ளையான நீங்கள் இப்படி நெஞ்சுறுதி குன்றிச் சாகலாமா?' என்று சாடுகிறாள். 'அதுவும் இடைவேளைக்கு முன்னால் சாகிறீர்களே! இந்தாருங்கள், இருநாற்றைம்பது ரூபாய்! போய் ஒரு புதுப் பசு வாங்கி வாருங்கள்!' என்றும் கூறுகிறாள்.''

''இரு, இரு!'' தயாரிப்பாளர் சட்டென்று தடுத்து ஆட்கொண்டார். அப்புறம் தம்மிலேயே நினைத்தவராக, தெளிவற்ற குரலில் கூறினார்: ''அப்புறம் இதையும் குறித்துக் கொள். தந்தை தன் பெண்ணைப் பார்த்து, 'சொல், இந்த ரூபாய் உனக்கு எங்கிருந்து கிடைத்தது? கிராமத்து மணியம்தானே கொடுத்தான்? நடத்தை கெட்டவளே! ஓடுகாலி! ஓடு, என் கண்ணெதிரில் நில்லாதே ஓடு....!' என்று சாடுகிறான்.''

எல்லோரும் 'இஷ், இஷ்' என்றனர்.

தயாரிப்பாளர் தொடர்ந்தார், கடைசியில் ஹீரோயின் கூறுவதாக: '''அப்பா! இந்தப் பணம் எல்லாம் நான் பிள்ளைப் பிராயத்திலிருந்தே பைசா பைசாவாகச் சேர்த்தது. அண்ணன் கொடுத்த பொங்கல் பணம், அம்மா கொடுத்த ஆடிப் பணம் இதெல்லாம் தான் இம்மாத் தொகையானது!' அப்புறம் அவள் விசித்து விசித்து உடல் குலுங்க அழுகிறாள். ஆம், உடல் குலுங்க.''

திரைக்கதை ஆசிரியன் குறித்துக் கொண்டான்.

தயாரிப்பாளர் கூறினார்: ''இன்னும் சீன் சரியான முறையிலே 'மெச்சூர்' ஆகவில்லை. நீங்கள் சிறிது யோசியுங்கள். சீனுக்குள் ஏதாவது சரியான கருப்பொருள் உருவாகணும். அப்பொழுதுதான் 'ஹிட்' ஆகும்!''

எல்லோரும் யோசிக்கலாயினர்.

பழைய திரைக்கதை ஆசிரியருக்குச் சூடு பிடித்தது. ''சார்! நாம் காவல் நிலையக் காட்சியைக்கூடக் காட்டலாம். ஹீரோயினின் தந்தை பசு காணாமற் போனதை எழுதி வைக்கக் காவல் நிலையத்துக்குப் போகிறான். காவல் நிலைய அதிகாரி ரிப்போர்ட் எழுதிக் கொள்ளத் தயாராயில்லை. அங்கு முன்னிருந்தே கிராமத்து மணியம் உட்கார்ந்திருக்கிறான், மீசையை முறுக்கி விட்டுக்கொண்டு. குடியானவன் காவல் நிலையத்துக்கு வெளியே வந்து நின்று கொண்டு, 'ஆண்டவனே! நீ படைத்த உலகில் மானிடனே இல்லையே!' என்று உரக்கப் பாடுகிறான்.''

''வெரிகுட்! வெரிகுட்!'' என்றார் தயாரிப்பாளர்.

''விரும்பினால், இந்த இடத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் ஒரு காட்சி உருவாக்கலாமே!'' என்றார் புரொடக்ஷன் மானேஜர்.

''அது எப்படி?'' என்று கேட்டார் புரொட்யூசர்.

''கிராமத்துத் தண்ணீர்த் துறையில் கிராமத்துப் பெண்கள் கூடிப் பேசிக் கொண்டிருப்பதாகக் காட்டலாம். ஒருத்தி, 'சொர்ணத்தின் பசு காணாமற் போய்விட்டது!' என்கிறாள்.

''இன்னொருத்தி, 'நல்ல பசுவடி!' என்கிறாள்.





# வாய்நாற்றம் உங்களை விலகி நிற்கச் செய்கிறது...






DC-G 30 TH

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத அளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் வித்தியாசமான பெப்பர்மின்ட் சுவையேதனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

கால்கேட் டூத் பிரஷ்

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



**உன்னத உணர்வு ஓகோகோ...** கன்னத்திலே காற்று மோதிப் படபடக்க... பின்னோக்கி சாலேயே நழுவிப் பறக்க... கன்னியரின் கண்களைப் பறிக்குதே உங்கள் வேகம்... வீறுகொண்ட நாகரீகக் களை துள்ளும்

**விண்ட்டெக்ஸ் ஷர்ட்டிங்.**

இன்றைக்கும் நாளைக்கும் என்றென்றைக்கும் ஏற்ற நவநாகரீகத் துணிகள். மிகச் சிறந்த செயற்கை நூலிழைகளால் செய்த பலப் பல வகைகளாம். தரத்திற்கு இதோ சிறப்பான ஒரு உத்தரவாதம்: விண்ட்டெக்ஸ் துணியிலே பழுது ஏதேனும் புலப்படுமானால்... இலவசமாக இன்னொன்றை வழங்குவோம், அத்துடன் தையல் கூலியும் வாபஸ்.

Wintex® FABRICS

**விண்ட்டெக்ஸ் மில்ஸ் பிரை. லிட்., விண்ட்டெக்ஸ் ரோடு, சூரத்.**

everest/566d/WM Tm

எல்லா பெரிய ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

''மூன்றுமவன்: 'ஆமாமடி ! மிக மிக நல்ல பசுவடி ! இரண்டு கன்றுகளுக்கப்பின் கன்றே போடவில்லையடி! இந்த மாதிரி நல்ல பசுவை நான் இந்தப் பூவுலகில் கண்டதே இல்லே!' ''

'' பேஷ் ! பேஷ் !'' புரொடக்ஷன் மானேஜரைத் தயாரிப்பாளர் அப்படியே இறுகத் தழுவிக் கொண்டார். வெகுநேரம் பிடிப்பை விடவே இல்லை. சிறிது நேரம் கழித்து, ''பிரதர் ! வரிவிலக்குக்கான சீன் தயாராகிவிட்டது. இதே காட்சியில் ராஷ்டிரபதி பரிசுக்கான விஷயத்தையும் எப்படியாவது இணைத்துவிட வேண்டும். இந்தியப் பண்பாடு என்றால், எனக்கு உயிர்; அதுவே என் கொள்கை !'' என்றார்.

எல்லோரும் ராஷ்டிரபதி பரிசு பெறுவதற்கான 'க்ளு' தேடுவதில் மூழ்கினர்.

திரைக்கதை ஆசிரியனுக்குக் குடும்பம் நடத்தியாக வேண்டிய நிர்ப்பந்த நிலை. எனவே, அதிக யோசனையில் ஆழ்ந்தவன் அவன்தான்.

[ஆதாரம்: மாதுரியில் வெளியான அஜாத சத்ருவின் ஹிந்திக் கதை. தமிழில்: ரா.வி.]



## தப்பித்தேன், பிழைத்தேன் !

கடற்கரையிலிருந்து சற்றுத் தூரத்தில் எண்ணெய்க் கிணறுகள் இருக்குவதுண்டு. அம்மாதிரி இடங்களில் தீ விபத்துக்கான சாத்தியக் கூறுகளும் அதிகம். அப்போது துரிதமாகத் தப்பிச் செல்லப் புதிய சாதனம் ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். மடித்து, சுருட்டி அடக்கமாய் வைத்திருக்கக் கூடிய இந்த 'சறுக்கு மரத்தை'யும் படகையும் பதினைந்து விநாடிகளுக்குள் காற்றடைத்து விரித்து பிரியர் செய்யலாம். பிறகு ஒரே நிமிஷத்தில் முப்பது பேர் வீதம் எண்ணெய்க் கிணறு மேடையிலிருந்து சறுக்கி இறங்கித் தப்பிக்கலாம். அமெரிக்காவில் உள்ள பி. எஃப். குட்ரிச் என்ற ரப்பர் சாதனங்கள் தயாரிப்பு நிறுவனம் இதை உருவாக்கியுள்ளது.

## கோப்பை பெற்றேன் !

பம்பாய் மகேந்திரா அண்ட் மகேந்திரா ஹாக்கிக் குழுவை ஜலந்தர் சிக்னல் படையின் கோஷ்டி , இறுதி ஆட்டத்தில் வென்று முருகப்பா தங்கக் கோப்பையைப் பெற்றது. தென் பிராந்திய தளபதி மேஜர் ஜெனரல் ராஜவாடே அவர்களின் மனைவியார் முருகப்பா தங்கக் கோப்பையைக் காப்டன் கரீந்தா சிடம் வழங்குகிறார். அருகே முருகப்பா தங்கக் கோப்பைப் போட்டியைத் திறம்பட நிர்வகித்த காரியதரிசி திரு கே. ஆர். சுப்பிரமணியம்.



## அரங்கம் ஏறினேன் !

சிசர்ஸ் பாங்கில் பணி புரியும் திரு வி. ஆர். சேஷ நாராயணனின் புதல்வி குமாரி சுமித்ராவின் நாட்டிய அரங்கேற்றம் அண்மையில் ரசிக ரஞ்சனி சபை அரங்கில் நடைபெற்றது. ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்கள் தலைமை வகித்துக் குமாரி சுமித்ராவை வாழ்த்தினார். திரு தண்டாயுதபாணி பிள்ளை குமாரி சுமித்ராவின் நிருத்த, பாவ அமைப்புகளைப் பாராட்டிப் பேசினார். குமாரி சுமித்ரா 'நாட்டிய நிருத்யாலயா'வின் தலைவி ஸ்ரீமதி மாலதி ஸ்ரீனிவாசனிடம் முறையாகப் பரத நாட்டியம் பயின்றவள்.



# பாபி

**'ராஜ்கபூர்' 'டீன் ஏஜ்'காரர் அல்ல. ஆயினும் இப்போதெல்லாம் 'டீன் ஏஜ்' ஜுக்குத் தரப்படும் முக்கியத்துவத்தைப் பார்த்ததும் அவரையும் 'டீன் ஏஜ்' மோகம் பற்றிக் கொண்டது போலும்! — படத்தில் வரும் ஒரு பாட்டு இப்படி நம்மைக் கருத வைக்கிறது!**

அன்றும் இன்றும் என்றுமே உள்ளதுதான் 'டீன் ஏஜ்' என்னும் இளமைப் பருவம். இளைஞர் முதல் முதியவர் வரை எல்லோரையும் ஆட்டிப் படைக்கும் இனக் கவர்ச்சி உணர்வும் புதிதல்ல.

இளமையில் எழும் இனக் கவர்ச்சி இடம், பொருள், ஏவல், உயர்வு — தாழ்வு ஒன்றும் பார்ப்பதில்லை. அது எப்பொழுது யாரை எப்படிப் பற்றிக் கொள்ளும் என்றும் கூற முடியாது. ஆனால் சமுதாயம் அதற்கும் கூட ஏதேதோ வரன்முறைகள் வகுத்துக் கொண்டு அணை கோல முயல்கிறது. ஆனால் உண்மை அன்பு அந்தக் கட்டுப்பாடுகளை யெல்லாம் உடைத்துக் கொண்டு இணைந்து இன்பம் காண முயல்கிறது.

இந்தக் கருத்தின் அடிப்படையில் உருவானதுதான் ராஜ்கபூரின் தயாரிப்பான பாபி என்னும் படம்.

பையனின் தந்தை பெருந்தனவந்தர். பாசத்தைக் காட்டிலும் பணத்துக்கும் அந்தஸ்துக்கும் அதிக மதிப்புத் தருபவர். பெண்ணின் தந்தையோ அதற்கு நேர் மாறானவர்; பெண்ணின் இன்பத்தையே பெரிதாக மதிப்பவர். இருவருடைய உணர்ச்சிகளுக்கும் ஓர் உச்சகட்டம் கொடுத்து, கருத்தொருமித்த காதலர்களை ஒன்றுசேர வைப்பதற்குள், அப்பப்பா! என்ன என்ன பாடுபட வேண்டியிருக்கிறது! காதல் — மோதல் — கட்டிப் பிடித்தல், அடிதடி, ஓடிப் பிடித்தல் என்று வகைக்குக் கொஞ்சம் வழங்கி, 'தீபாவளி மிக்ஸர்' செய்து சிறந்த பொழுதுபோக்கு என்று ரசிகர்கள் மகிழ்ந்து போகும் அளவுக்கு ராஜ்கபூரின் டைரக்ஷன் திறமை பளிச்சிடுகிறது.

'டீன் ஏஜ்' காதலர்களாக வரும் ரிஷிகபூரும் டிம்பிள் கபாடியாவும் தங்கள் துணிச்சலான நடிப்பால் பழமைக்கு ஒரு புதுமை கூட்டுகிறார்கள். பயமறியாத இளங்கன்றுகள்!

பிராண் தாம் ஏற்ற பாத்திரத்தில் பிராணன் புகுத்தவில்லை. ஆனால் பிரேம்நாத் நடிப்பில் எல்லோரையும் ஏப்பம் விட்டு விட்டுப் பெயரைத் தட்டிக் கொண்டு போகிறார். மறை கழன்ற மங்கையாக வரும் பரிதா ஜலால் தாம் ஏற்ற பாத்திரத்தைத் திறம்பட நிர்வகித்திருக்கிறார். துர்க்கா கோட்டேயும் தாம் சோடை வில்லை என்பதை நிரூபிக்கிறார்.

ஒன்பது பாடல்கள்! ஒன்றிரண்டு நல்ல பொருட்செறிவு மிகுந்தவை. பாடல்களுக்கேற்பப் படம் பிடித்திருக்கும் முறை பிரமாதம்! 'நான் கவிஞன் அல்ல; ஆனால் உன்னைப் பார்த்ததும் கவிதை புனைய வந்துவிட்டது. நான் காதலன் அல்ல; ஆனால் உன்னைக் கண்டதும் காதல் புரிய வந்துவிட்டது!' என்னும் பொருள் தருவது ஒரு பாடல்.

இறுதியில் நீரில் குதித்து நீந்தி வரும் கட்டத்தில் நீரோட்டத்திலும் ஆழம் இல்லை; படத்திலும்தான். —ரா.வீ.



# பூக்காரி

தமிழ்த் திரை உலகினை முன்னேற விடாமல் சதி பண்ணும் எழுதப் படாத விதிமுறைகளில் மாட்டிக் கொண்டு திணறுகிறது இப்படம்.

படத்தில் அது இல்லே, இது இல்லே என்று யாரும் சொல்லக் கூடாதென்றுதானே என்னவோ, பார்த்துப் பார்த்துத் திரைப்படத்துக்குத் தேவையான அம்சங்களையெல்லாம் சேர்த்து ஒரு 'ஃபார்முலா' படமாகத் தயாரித்திருக்கிறார்கள், 'பூக்காரி'யை.

கிராமத்து மக்கள் பட்டணத்துப் பகட்டில் ஏமாறுதல், ஏழைப் பெண்ணின் காதல், பணக்காரப் பெண்ணின் காதல், இரு பெண்கள் ஒருவனைக் காதலிப்பது, அப்படிக் காதலிப்பதற்குத் தண்டனையாக, ஒருத்தி இறப்பது, 'டிஷ்யூம் டிஷ்யூம்' சண்டை, ஒரு பேதைப் பெண் கற்பழிக்கப்படுதல், ஊைப் டான்ஸுகள் ஆகிய 'ஃபார்முலா' சரக்குகளுக்கிடையில், கன்னத்தில் அறைதல், கண்ணீர் விடுதல், மனிதப் பண்பு எல்லாம் வருகின்றன. மூலக் கதையை முக்கியமாகக் கருதாமல், 'பாக்ஸ் ஆபீஸ்' பாடாவதிகளுக்கு அதிகமாக இடம் அளித்துவிட்டபடியால் மூலக் கதை திக்கித் திணறுகிறது!

அஞ்சுகம் பிக்சர்ஸாரின் ''பூக்காரி'' கவர்ச்சி தரும் வண்ணப் படம். அநுபவம் முதிர்ந்த கிருஷ்ணன் பஞ்சுவின் டைரக்ஷன் பாராட்டுக்குத் தனி இடம் பெறுகிறது.

நமது தமிழ்ப்படக் கதாநாயகர்களுக்குள் மிகவும் இளைஞரான மு. க. முத்து கதாநாயகனாக நடிக்கிறார். காதல் காட்சிகளில் துள்ளிக் குதித்து மிகவும் சுறுசுறுப்பாக நடிக்கிறார். மற்ற இடங்களில் அவர் நடிப்பில் இன்னும் மெருகு ஏற வேண்டும்.

ஏழைப் பூக்காரி வள்ளி ஆடிப் பாடிக் குதித்து, மிகவும் சுலபமாகக் காதலித்து, காதலித்தவனையே கரம் பற்றும் வாய்ப்பையும் பெற்று விடுகிறாள். ஆனால் கதையின் 'ஃபார்முலா' அவளைக் கொன்று விடுகிறது. (என்ன செய்வது? இருதார மணத்துக்கு நம் சட்டத்தில் தடை இருக்கிறதே! அந்தத் தடைக்குப் பயந்துதானே காதலர்கள் கட்டிப் பிடித்து, ஒட்டி உரசி - மணந்து கொள்வதைத் தவிர—மற்றவைகளையெல்லாம் செய்து காட்டிவிடுகிறார்கள் !)

'ஃபார்முலா'க் கதையையும் அதற்கேற்ற வசனத்தையும் தீட்டியிருப்பவர் டி. என். பாலு. பணக்காரப் பெண்ணாக வந்து காதலிப்பவர் நிர்மலா. குதிரை சவாரியின் போதே தம் காதலைச் சாதித்துக் கொண்டு கதையைச் சுலபமாக முடித்து விடுகிறார். பூக்காரியாக வரும் மஞ்சுளா குதித்துப் பாடி, ஆடி ஓட வேண்டியிருந்தது. நிர்மலாவுக்கு அந்தச் சிரமம்கூட இருக்கவில்லை.

எல். ஆர். ஈசுவரியின் குரலில் ஒலிக்கும் ''முப்பது பைசா மூணு முழம்'' என்ற பாட்டும், ''முத்துப் பல் சிரிப்பென்னவோ'' என்ற பாட்டும் நம் கவனத்தை ஈர்க்கின்றன. பாடல்கள் இயற்றியவர் வாலி. படத்தின் ஒளிப்பதிவு மிகவும் சிறப்பாயிருக்கிறது.

அமைதியான இயற்கை நடிப்புக்கு எடுத்துக்காட்டாக எஸ். வி. சுப்பையா இருக்கிறார். அவர் மனைவியாக வரும் ஸ்ரீரஞ்சனியின் பண்பட்ட நடிப்பு மிகவும் நன்றாயிருக்கிறது. கள்ளம் கபடில்லாத கிராமத்துப் பெண்ணாக வரும் ஜெயசித்ராவின் நடிப்புக்கு ஒரு 'சபாஷ்' போட்டாக வேண்டும். பலவந்தமாகக் கற்பழிக்கப்பட்டதன் காரணமாகப் பேசும் சக்தியை இழந்துவிட்ட பிறகு தம் நடிப்பினால் ரசிகர்களைக் கண் கலங்கச் செய்து விடுகிறார். தேங்காய் சீனிவாசன் தரகராகவும், நல்ல மனிதராகவும் வருகிறார்.

என்னதான் பாட்டுப் பாடிக் கொண்டு தெருவில் பூக்காரி வண்ண வண்ணப் பூக்களை விற்றாலும், மணம் இல்லாப் பூவுக்கு மவுசு எங்கிருந்து வரும்?



தமிழ்த் திரை உலகின் முன்னேற விடாமல் சதி பண்ணும் எழுதப்படாத விதிமுறைகளை மாற்றி யமைக்கிறது இப்படம்.

# கௌரவம்

''வியட்நாம் வீடு'' படத்தில் வந்த 'பிரஸ்டீஜ்' பத்மநாபனின் மறு பிறவிதான் பாரிஸ்டர் ரஜனிகாந்த். எதிலும் கௌரவம், எங்கும் கௌரவம், எதற்கும் கௌரவம் என்று பார்த்து நிமிர்ந்து நடந்து கடைசியில் கௌரவத்துக்காகவே உயிரையும் விட்டவர்தான் பாரிஸ்டர் ரஜனிகாந்த். 'பிரஸ்டீஜ்' பத்மநாபனும் அப்படி வாழ்ந்து மறைந்தவர் தானே? இதுவும் அதைப் போலவே அந்தணர் குடும்பக் கதைதான். (இப்படி 'தான், தான்' என்று போட்டுக் கொண்டே போனால் என்னதான் அர்த்தம்? என்கிறீர்களா? 'தான்' என்பதில்தானே கௌரவப் பிரச்னையே ஆரம்பமாகிறது! 'தான்' இல்லாதபோனால் கௌரவம் ஏது?)

வியட்நாம் வீட்டின் ''கௌரவ''த்துக்குக் கௌரவம் அளிப்பவர் சிவாஜிதான்; தந்தை, மகன் என்ற இருவேறு இயல்புகளைக்கொண்ட இருவேறு பாத்திரங்களை ஏற்று நடிப்புக்கு இலக்கணம் வகுத்துத் தந்திருக்கிறார். காட்சிக்குக் காட்சி நம் முன் பாரிஸ்டர் ரஜனிகாந்தைக் கொண்டு வந்து நிறுத்துகிறார். ''கண்ணா! நீயும் நானுமா?'' என்ற பாட்டுடன் அவர் இணைந்து நடிக்கும் கட்டம் ஒன்று போதும், அவர் நடிப்பாற்றலை எடுத்துக்காட்ட!

பாரிஸ்டரின் வளர்ப்பு மகன் கண்ணனாக வரும் சிவாஜி, மரியாதை, அடக்கம், நன்றி உணர்ச்சி, பொறுமை ஆகிய நற்குணங்களின் இருப்பிடமாக விளங்குகிறார். பாரிஸ்டர் சிவாஜியிடம் கண்ட மிடுக்கு, தற்பெருமை, தன்னம்பிக்கை காரணமாக எழுந்த செருக்கு ஆகிய [illegible] அவர் மகன் சிவாஜியிடம் [illegible] பதே அவர் நடிப்புத் திறமைக்கு எடுத்துக்காட்டாகும்.

இப்படத்தில் ஒரு விசேஷம். காதல் இருக்கிறது. ஆனால் காதலர்கள் கட்டிப் புரளவில்லை. பாடல் இருக்கிறது; ஆனால் அதிலேயே உருகி உட்கார்ந்துபோய், ஒரு நீண்ட பாட்டைப் பாடிக் கண்ணீர் விட்டு யாரும் கலங்கவில்லை. காதலிப்பதில் இன்னொரு புதுமையும் இருக்கிறது. அதுதான் காதலர்கள் 'விசில்' அடித்துத் தங்கள் காதலை வளர்த்துக் கொள்வது. கண்ணனும், ராதையும் காதலிப்பதோடு நின்றுவிடுவது புதுமைதான். கல்யாணம்வரையில் போகவில்லை. இப்படித் திரை உலக வழிமுறைகளை மாற்றியமைத்ததற்காகவே டைரக்டரைப் பாராட்டலாம்.

கண்ணதாசனின், ''பாலூட்டி வளர்த்த கிளி'' என்ற பாடல் நல்ல இசையமைப்போடு கருத்துச் செறிவும் கொண்டு கேட்பவர் மனத்துக்கு நிறைவைத் தருகிறது.

'தன்நிலை தாழாமையும், அந்நிலை தாழ்ந்தக்கால் உயிர்வாழாமையும் மானம் எனப்படும்' என்னும் திரைக்கதையின் அடிப்படைக் கருத்து படம் முழுவதும் வியாபித்துள்ளது.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய முக்கிய பொறுப்புக்களை ஏற்றிருக்கும் வியட்நாம் வீடு சுந்தரம் அவற்றைப் பெருமைப்படும் விதத்தில் நிறைவேற்றி யிருக்கிறார். இவ்வண்ணப் படத்தின் ஒளிப் பதிவு வின்சென்ட் அவர்களின் கைவண்ணத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு. காட்சிக்குக் காட்சி கலையம்சத்தோடு மிளிர்கிறது ஒளிப் பதிவு.

உஷாநந்தினி, பெண் வக்கீல் ராதா. கண்ணனின் காதலி. வண்ண வண்ண உடையில் மின்னிப் பளிச்சிடுகிறார். படத்தின் கவர்ச்சிக்கு ஜெயகுமாரி துணை நிற்கிறார். குடும்பத்துக்கேற்ற குலவிளக்காக, பாரிஸ்டர் மனைவியாய்ப் பண்டரிபாய் வந்து, தம் அனுபவ நடிப்பால் பார்ப்பவர் மனங்களில் இடம் பெற்று விடுகிறார். வக்கீல் குமாஸ்தா நாகேஷ் வரும் இடங்களிலெல்லாம் 'குபீர்' சிரிப்பும் வருகிறது. பாரிஸ்டர் ரஜனிகாந்தின் கௌரவத்துக்கு ஆதரவாக இருந்து திரைக்கதையை ஓட்டிச் செல்பவர் மேஜர் சுந்தரராஜன்.

தமிழ்த் திரை உலகின் கௌரவத்தை உயர்த்தும் படம் ''கௌரவம்''. —காந்தன்





# பகலில் வீட்டுச் சாப்பாடு: இரவில் ஓட்டல் சாப்பாடு!



எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் எனக்கு ஏற்கனவே உறவுக்காரர்தான்! எனது அத்தை மகன்....! என் 'கணவர் பதவியையும் வீட்டுப் பிரஸிடெண்ட் பதவியையும் சேர்த்து ஏற்றுக்கொண்டார்!

மங்களூருக்கு அடுத்த பணம்பூர் இவருடைய ஊர்! பதிமூன்று வயதிலேயே எப்படியாவது பிழைத்துக் கொள்ளலாம் என்கிற தைரியத்தில் பட்டணத்துக்கு வந்துவிட்டாராம். கண்டிப்பு மிகுந்த உறவுக்காரர் ஒருவரின் சாதாரண ஹோட்டலில் இரண்டு வருட காலம் எல்லா வித வேலைகளையும் செய்து அனுபவப் படிப்பு படித்தவர்.

''அந்த இரண்டு வருட கால நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்க்கிறபோது வேடிக்கையாக இருக்கிறது. அன்றுடம் எத்தனையோ தடவைகள் ஆத்திரமும் கோபமும் அடைந்திருக்கிறேன். அப்படிப்பட்ட கண்டிப்பான வேலை. ஆனால் இப்போது நினைத்துப் பார்க்கிற போது அந்த வாழ்க்கை எவ்வளவு தூரம் அனுபவத்தைக் கொடுத்தது என்று உணர்கிறேன்'' என்று இவர் அடிக்கடி அந்த உறவுக்காரருக்குத் தம் ஆத்மார்த்தமான நன்றியை வாய்விட்டுச் சொல்லுவார்.

பகல் சாப்பாட்டுக்கு எந்த நேரமானாலும் வீட்டுக்கு வந்து விடுவார். இரவுச் சாப்பாடு என்றைக்கும் ஹோட்டலில்தான். இதற்கு இவர் சொல்லும் காரணம் விசித்திரமாக இருக்கும். இவர் சாப்பிட வரமாட்டார் என்பதற்காக நாங்கள், வீட்டில், எங்கள் சமையல் தயாரிப்புகளில் அசிரத்தையாக இருந்துவிடக் கூடாதாம். அதைக் கவனிக்க வீட்டுக்கு வருவார். எங்களுடன் சேர்ந்து சாப்பிடுவார்.

இரவு ஹோட்டல் சாப்பாட்டின் காரணம் என்ன தெரியுமா? வாடிக்கைக்காரர்களுக்கு ருசியான சாப்பாடு போடப்படுகிறதா என்று கவனிக்க வேண்டுமே! 'ஸ்வாகத்' ஹோட்டல் உரிமையாளராயிற்றே!

இந்த ஹோட்டலுக்கு இலேசாகப் பெயர் வைக்கவில்லை. கட்டடம் எழும்பித் திறப்பு விழா நடத்துமுன், ஒரு நல்ல பெயரைக் குறிப்பிடுபவருக்குப் பரிசு அளிப்பதாக அறிவித்தார். எத்தனையோ பேர் யோசனை சொன்னார்கள். ஓர் அன்பர் குறிப்பிட்ட 'ஸ்வாகதம்' என்ற பெயர் இவருக்குப் பிடித்திருந்தது. 'நல்வரவு' என்ற பொருளாயிற்றே! பரிசை அளித்து விட்டு அந்தப்பெயரில் ஒருசிறு மாற்றம் செய்து 'ஸ்வாகத்' ஆக்கினார்.

அங்கே ஹோட்டல் தொடங்குமுன் ஒரு திருமணத்தையே நடத்த வேண்டிய அவசியமும் இவருக்கு ஏற்பட்டது. அந்தத் திருமணம் சம்பந்தப்பட்ட ஆசாமியின் பெயர் கணபதி. என்ன பெயர்ப் பொருத்தம்!



இவர் பழைய 'சத்திய இருதா' கட்டடத்தை வாங்கி நாங்கள் அதிர்ஷ்டக்காரியாக நினைத்திருந்த எங்களது பெண் ஹேமமாலினியின் பெயரைச் சூட்டித் திருமண மண்டபமாக மாற்றினார். சிப்பந்திகளின் கவனப் பிசகினால் ஒரே முகூர்த்தத்துக்கு இரண்டு வெவ்வேறு கோஷ்டியினருக்கு அந்த ஒரே கல்யாண மண்டபத்தை ஒதுக்கிவிட்டார்கள். கடைசி நேரத்தில் விவரம் தெரிந்த போது, இவர் கொஞ்சம் கூடத் தயங்காமல், திறப்பு விழாவுக்குத் தயாராக இருக்கும் 'ஸ்வாகத்'தில் ஒரு திருமணத்துக்கு இடம் ஒதுக்கிக் கொடுத்துவிட்டார்.

இவருடைய பொழுது போக்கு விநோதமானது. நகரத்தில் இவர் போகும் வழியில், எங்காவது புதிதாகப் பெரிய கட்டட வேலை நடந்து கொண்டிருந்தால், ஓரமாகக் காரை நிறுத்திவிட்டு இறங்கி உருவாகிக் கொண்டிருக்கும் அந்தக் கட்டடத்தைப் பார்த்துக் கொண்டே நின்றுவிடுவார். அதில் ஓர் ஆசை! இப்படிக் கவனித்துக் கவனித்துத்தான் இப்போது உள்ள ஹோட்டலை எழுப்பினார். அதன் பக்கத்திலேயே ஓர் ஒன்பது மாடி ஹோட்டலையும் உருவாக்கத் திட்டம் போட்டுக் கொண்டிருக்கிறார்.

என் பெரிய பையன் கார் ஓட்டக் கற்றுக் கொண்டுவிட்



டான். இன்னும் பதினெட்டு வயதாகச் சில மாதங்கள் இருப்பதால், அதற்குமுன், வயதைக் கூட்டிக் குறைத்து, லைசென்ஸ் வாங்கிக் கொடுக்க மாட்டேன் என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். ஆனால் குழந்தைகளின் படிப்பைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை என் தலையில் சுமத்தியிருப்பதால், எனக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்து லைசென்ஸ் வாங்கிக் கொடுத்து விட்டார்! குழந்தைகளைப் பள்ளிக்கூடம் கொண்டு போய் விட்டு அழைத்துவருவது என் வேலை.

காலையில் எழுந்து ஸ்நானம் செய்தவுடன் பத்துப் பதினைந்து நிமிடங்கள் பூஜை அறையில் ஜபம் செய்வார். இது சமீப காலமாகத்தான். ''முன்பெல்லாம் ரொம்பப்பட்ட நாட்களில், அன்றாட வேலைகளில் சுவனத்தைச் செலுத்தத்தான் நேரம் இருந்தது. ஆண்டவனை நினைக்க நேரம் இல்லை. இப்போது அந்த ஆண்டவன் ஓரளவு வசதியான வாழ்க்கைக்கு வழி காண்பித்திருக்கிறார். ஆகையால் அந்த ஆண்டவனை நினைக்கச் சிறிது அவகாசம் கிடைக்கிறது'' என்பார்.

வீடு அமைந்ததில் இவர் அதிர்ஷ்டக்காரர். மயிலாப்பூரில் வாடகை வீட்டில்

உழைப்பே கடவுள் என்ற கொள்கை உடையவர். 'ஒரு நல்ல நிறுவனத்தை உருவாக்குவது கடினம். அதன் நல்ல பெயரைக் காப்பாற்றி வருவது அதைவிடக் கடினம்' என்ற அடிப்படையில் எப்போதும் அந்தச் சிந்தனையிலேயே லயித்திருப்பது இவர் வழக்கம்.

---

பிரசிடெண்ட்: **திரு ராமகிருஷ்ண ஐதாளா**
உரிமையாளர்: 'ஸ்வாகத்' ஹோட்டல், சென்னை-14
பேட்டியளித்தவர்: அன்னாரின் மனைவி **ஸ்ரீமதி வத்ஸலா**

---

இருந்த போது ராயப்பேட்டைப் பகுதியில் ஒரு வீட்டை வாங்க ஆசைப்பட்டார். அப்போது அந்த எண்ணம் நிறைவேறவில்லை. பிறகு ராயப்பேட்டைப் பகுதியிலேயே 'ஸ்வாகத்' உருவானபோது, இவர் முன்பு பார்த்த வீடே இவரைத் தேடி வந்தது. இவருக்குப் பரம சந்தோஷம்.

இரக்க சுபாவம் நிறைந்தவர். 'காரணம், ஆதிநாட்களில் தாம் பட்ட கஷ்டங்களை மறக்காதவர். இவரிடம் கண்டிப்பு எவ்வளவு உண்டோ, அந்த அளவுக்கு அன்பும் கருணையும் உண்டு.

பேட்டி :

**கோமதிஸ்வாமிநாதன்**

## பத்தாயிரம் ரூபாய் நஷ்டம் பாதியாய்க் குறைந்தது!




ரூ. 5000 பரிசு பெற உதவிய ஸ்டாண்டர்ட் கார் போட்டிக்கு முன் பரிசீலனைக்கு உள்ளாகிறது.

சமீபத்தில் நடைபெற்ற 1700 கிலோ மீட்டர் மோட்டார் பந்தயத்தில் கலந்து கொண்டு அடாது மழை பெய்தும் விடாது கார் ஓட்டிச் சென்று மின்னி கம்பெனியைச் சேர்ந்த அதிகாரி இளைஞர் சுரேஷ் சுந்தரம் குழுவினர் முதல் பரிசாக ஐயாயிரம் ரூபாய் பெற்றனர். ''முப்பத்து நாலு மணி நேரம் விடாது ஓட்டி நடுவில் மூன்றாவில் ஒரே ஒரு மணி நேரம் ஓய்வெடுத்துக் கொண்டோம்!'' என்று சொன்னார், வெற்றி வீரர் சுரேஷ் சுந்தரம்.

'' ஐயா! ஐயாயிரம் ரூபாய் பரிசு பெற்ற உமக்கும் பாராட்டு!'' என்று மோட்டார்ப் பந்தய ரசிகர் அவரது கையைக் குலுக்கினார்!

''அதுசரி! நான் பத்தாயிரம் ரூபாய் இந்தப் போட்டியையொட்டிய கடுமையான பயிற்சிகளுக்குச் செலவழித்திருக்கிறேன்; எனக்கு ஐயாயிரம் நஷ்டம்!'' என்று ஒரு போடு போட்டார் சுரேஷ் சுந்தரம்!

ஏதோ, பத்தாயிரமும் நஷ்டமாகாமல் முதல் பரிசு காப்பாற்றியதே என்று அவர் சந்தோஷப்பட வேண்டியதுதான்!

இவர்கள் ஸ்டாண்டர்ட் காரை ஓட்டிச்சென்று அதற்கும் தங்களுக்கும் பெருமை சேர்த்துக் கொண்டனர்.

இந்த மோட்டார்ப் பந்தயத்தில் 40 கார்களில் ஒன்பது கார்களே போட்டியின் முடிவை எட்டின. முதல் பரிசு பெற்ற சுரேஷ் சுந்தரம் 'நாவிகேட்டராக' அமர்ந்து வேகத்தையும் இடத்தையும் கணக்கிட்டுச் சொல்ல 90 சத விகித டிரைவிங்கைச் சிறப்பாகச் செய்தவர் சூவாலாஸைச் சேர்ந்த பி. வேணுகோபால். பத்து சத விகித தூரம் சுரேஷ் சுந்தரத்தின் சகோதரர் சின்னி கிருஷ்ணன் சாரதியம் செய்தார்! லண்டனைச் சேர்ந்த திரு செல்லப்பன் போட்டிக்கு முன் என்ஜின் பாகங்கள் அனைத்தையும் சரி பார்த்துக் கொடுத்ததால் பெருமையில் அவருக்கும் பங்கு உண்டு.

— குண்டுமணி






CHAITRA-BLS 8 TAM

மூன்று மாதங்களுக்கு மேலான குழந்தைகளுக்கு
அமுல் தரும் ஒரு புதிய முக்கிய உணவு

# பாலஅமுல்

குழந்தையின் முதல் தானிய துணை உணவு
எளிதில் சீரணிக்கக் கூடிய புரதச் சத்து நிரம்பியது.



## மூளையும் உடலும் முழுமையாக வளர

உங்கள் குழந்தை, பிறந்த மூன்றுவது மாதத்திலிருந்து, பால் குடிப்பதுடன், தானிய துணை உணவுகளையும் உட்கொள்ளுகிறது அல்லவா? சாதம், கூழ், வாழைப் பழம் போன்ற வழக்கமான உணவுகள் உங்கள் குழந்தைக்குப் போதுமான புரதச் சத்துக்கள் வழங்குவதில்லை; ஏனெனில் அவற்றில் மாவுப்பொருள் அதிகமாக உள்ளது. முதல் இரண்டு ஆண்டுகளில், போதிய புரதச் சத்து தந்தால்தான் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் சீராக வளரும். பாலஅமுல் ஒரு சரிவிகித சத்துணவு. அதில் தரமுயர்ந்த பால் மற்றும் தாவர புரதச் சத்துக்கள் நிறைய உள்ளன. வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் மிகுந்துள்ளன. இவற்றால் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் முழுமையாக வளர உறுதி கிடைக்கிறது.

வேலூரிலுள்ள கிறிஸ்டியன் மெடிகல் காலேஜ் அண்டு ஹாஸ்பிடலின் டாக்டர்கள் குழந்தைகளுக்குப் பாலஅமுல் புகட்டிப் பரிசோதனைகள் செய்து சிறந்த பலன் கண்டிருக்கிறார்கள்.

**இலவசம்!**
பாலஅமுல் பற்றிய விவரமான நூலை இலவசமாக பெற எழுதுக: தபால் பை 10124, பம்பாய் 400 001.




கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன், ஆனந்த், குஜராத்.

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## வழித் துணை

குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு பரஞ்சோதி பின்னால் வந்த குதிரையண்டை சென்ற போது அவன் மனத்தில் ஏற்கனவே ஏற்பட்டிருந்த பீதியெல்லாம் கோபமாக மாறியிருந்தது. மார்பில் பாய்ச்சுவதற்குச் சித்தமாக அவனுடைய வலது கையானது வேலைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது.

ஆனால், பரஞ்சோதி அருகில் நெருங்கியதும் அந்தக் குதிரை மீது வந்த மனிதன் செய்த காரியங்கள் வேலுக்கு வேலை இல்லாமல் செய்துவிட்டன!

ஆஜானுபாகுவாய் முகத்தில் பெரிய மீசையுடனும் தலையில் பெரிய முண்டாசுடனும் விளங்கிய அந்தத் திடகாத்திர மனிதன், பரஞ்சோதி தன் அருகில் வந்ததும், ''ஐயையோ! ஐயையோ! பிசாசு! பிசாசு!'' என்று அலறிக் கொண்டு குதிரையின் மீதிருந்து நழுவித் 'தொபுகடீ'ரென்று கீழே விழுந்தான். அதைப் பார்த்த பரஞ்சோதிக்குப் பயம், கோபம் எல்லாம் பறந்து போய்ப் பீறிக் கொண்டு சிரிப்பு வந்தது. கீழே விழுந்தவன் போர்க் கோலம் பூண்ட வீரன் என்பதையும், அவனுடைய இடையில் கட்டித் தொங்கிய பெரிய வாளையும் பார்த்ததும் பரஞ்சோதி 'கலகல'வென்று சிரிக்கத் தொடங்கினான். பேய் பிசாசுக்குப் பயந்தவன் தான் ஒருவன் மட்டும் அல்ல என்பதை நினைத்தபோது அவனுக்கு ஒரு வகையான திருப்தி உண்டாயிற்று.

கீழே விழுந்த மனிதன் மீண்டும், ''ஐயையோ! பிசாசு சிரிக்கிறதே! பயமாயிருக்கிறதே!'' என்று அலறினான். அந்த வேடிக்கையை இன்னும் கொஞ்சம் அனுபவிக்க விரும்பிய பரஞ்சோதி குதிரை மேலிருந்தபடியே வேலை



நீட்டிக் கீழே கிடந்தவனுடைய கையில் இலேசாகக் குத்தியவண்ணம், பிசாசு பேசுவது போல் தானாகக் கற்பனை செய்து கொண்ட அடித் தொண்டைக் குரலில், "அடே! உன்னை விடமாட்டேன்! விழுங்கி விடுவேன்!" என்றான்.

அதற்கு அடுத்த கணத்தில் பரஞ்சோதி சற்றும் எதிர்பாராத காரியம் ஒன்று நடந்தது. அது என்னவென்பதையே அச்சமயம் அவனால் நன்கு தெரிந்து கொள்ளக்கூட முடியவில்லை. ஒரு கணம் அவன் தலைகீழாகப் பாதாளத்தில் விழுவது போலிருந்தது. உடனே அவன் தலையின் மேல் ஆயிரம் இடி சேர்ந்தாற்போல் விழுந்தது! அடுத்தபடியாக அவனுடைய மார்பின் மேல் விந்திய பர்வதம் வந்து உட்காருவதுபோல் தோன்றியது. பிறகு ஒரு பிரம்மாண்டமான பூதம், 'ஹா ஹா ஹா' என்று பயங்கரமான பேய்க் குரலில் சிரித்துக் கொண்டு, அவனுடைய தோள்களைப் பிடித்துப் பலமாகக் குலுக்கியது.

சற்று நிதானித்து மனத்தைத் தெளிவுபடுத்திக் கொண்டு சிந்தித்த பிறகுதான் பரஞ்சோதிக்கு நடந்தது என்னவென்பது புலனாயிற்று.

பரஞ்சோதி தன்னுடைய வேலின் நுனியினால் கீழே கிடந்தவனுடைய கையை இலேசாகக் குத்தி, "விழுங்கி விடுவேன்!" என்று கத்தியவுடனே அந்த மனிதன் பரஞ்சோதியின் வேலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ஓர் இழுப்பு இழுத்தான். அவ்வளவுதான்; பரஞ்சோதி குதிரை மேலிருந்து தடாலென்று தலை குப்புறக் கீழே விழுந்தான். உடனே, அந்த மனிதன் மின்னலைப் போல் பாய்ந்து வந்து பரஞ்சோதியின் மார்பின் மேல் உட்கார்ந்து கொண்டு, அவனுடைய தோள்களைப் பிடித்துக் குலுக்கினான். அதோடு, "ஹா ஹா ஹா! நீ பிசாசு இல்லை; மனுஷன் தான்! பிசாசு மாதிரி கத்தி என்னைப் பயமுறுத்தப் பார்த்தாயல்லவா? நல்ல வேடிக்கை! ஹா ஹா ஹா" என்று உரத்த குரலில் சிரித்துக் கொண்டே கூவினான். பின்னர், பரஞ்சோதியின் மார்பின் மேலிருந்து எழுந்து நின்று, பரஞ்சோதியையும் தரையிலிருந்து தூக்கி நிறுத்தி, "தம்பி! இந்த மயான பூமியில் ஒண்டியாகப் போக வேண்டுமே என்று பயந்து கொண்டிருந்தேன். நல்ல வேளையாய் வழித்துணைக்குக் கிடைத்தாய். நீ எங்கே போகிறாய், தம்பி?" என்று ரொம்பவும் பழக்கமானவனைப் போல் தோளின் மேல் கையைப் போட்டுக்கொண்டு சல்லாபமாகக் கேட்டான்.

பரஞ்சோதி சற்றுமுன் நடந்த சம்பவங்களினால் பெரிதும் அதிர்ச்சியடைந்திருந்தான். ஒரு பக்கம் அவன் உள்ளத்தில் கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. அவமானம் ஒரு பக்கம் பிடுங்கித் தின்றது. தன்னை இப்படியெல்லாம் கதி கலங்க அடித்தவன் சாமானியப்பட்டவன் அல்ல, மகா பலசாலியான வீர புருஷன் என்பதை அவன் உணர்ந்திருந்தான். இதனால் அம்மனிதன்மேல் ஒருவித மரியாதையும் அவன் மனத்தில் ஏற்பட்டிருந்தது.



ஆனால், "எந்த ஊருக்குப் போகிறாய், தம்பி!" என்று அந்த ஆள் கேட்டதும், புத்தபிக்ஷு செய்திருந்த எச்சரிக்கைகள் ஞாபகத்துக்கு வந்தன. தன் தோள் மேலிருந்த அவனுடைய கைகளை உதறித் தள்ளிவிட்டு, "நான் எந்த ஊருக்குப் போனால் உனக்கு என்ன?" என்று வெறுப்பான குரலில் கேட்டான் பரஞ்சோதி.

"எனக்கு ஒன்றுமில்லை, அப்பா! ஒன்றுமே இல்லை. இன்று ராத்திரி வழித்துணைக்கு நீ கிடைத்தாயே, அதுவே போதும். ஏதோ இரகசிய காரியமாகப் போகிறாயாக்கும். ஆனால்......"

இப்படிச் சொல்லி நிறுத்தி, அந்த வீரன் பரஞ்சோதியைச் சற்றுக் கவனமாக உற்றுப் பார்த்தான். அந்தப் பார்வையின் கருத்தை உணர்ந்து கொள்வதற்குள்ளே, மறுபடியும் அவன் தரையிலே விழும்படி நேர்ந்தது! ஒரே நொடியில் அவ்வீரன் பரஞ்சோதியைக் கீழே தள்ளியதுமல்லாமல், தரையில் அவன் அருகில் உட்கார்ந்து கழுத்தை நெரித்துப் பிடித்துக் கொண்டான்.

"நீ வாதாபி ஒற்றனா, இல்லையா? சத்தியமாகச் சொல்" என்று கடுமை நிறைந்த குரலில் கேட்டான்.



பரஞ்சோதிக்குக் கோபத்தினாலும் வெட்கத்தினாலும் கண்களில் ஜலம் வரும் போலிருந்தது. அவன் விம்முகிற குரலில், "நீர் சுத்த வீரனாக இருந்தால் என்னோடு எதிருக்கெதிர் நின்று வாளோ வேலோ எடுத்துச் சண்டை செய்யும்....." என்றான்.

"உன்னோடு சண்டை போட வேண்டுமா? எதற்காக அப்பனே? நீ வாதாபி ஒற்றனாயிருக்கும் பட்சத்தில் உன்னை இப்படியே யமனுலகம் அனுப்புவேன். நீ ஒற்றனில்லையென்றால் உன்னோடு சண்டை போடுவானேன்? நாம் இருவரும் சிநேகிதர்களாக இருக்கலாம். நீ ஒற்றனில்லை என்பதை மட்டும் நிரூபித்துவிடு. இதோ இம்மாதிரி ரிஷப இலச்சினை உன்னிடம் இருக்கிறதா?" என்று கேட்டுக் கொண்டே அவ்வீரன் இடது கையினால் தன் மடியிலிருந்து வட்ட வடிவமான ஒரு செம்புத் தகட்டை எடுத்துக் காட்டினான். பல்லவ சாம்ராஜ்யத்தில் பிரயாண அனுமதி பெற்ற இராஜ தூதர்களுக்கு அடையாளமாகக் கொடுக்கும் ரிஷப முத்திரை பதித்த தகடு அது.

பரஞ்சோதியும் வேண்டா வெறுப்புடன் தன் மடியிலிருந்த மேற்படி முத்திரைத் தகட்டை எடுத்துக் காட்டியதும், அவ்வீரன் பரஞ்சோதியின் கழுத்தை விட்டதோடல்லாமல், அவனைத் தூக்கி நிறுத்தி ஆர்வத்துடன் ஆலிங்கனம் செய்துகொண்டு, "தம்பி! என்னை மன்னித்துவிடு! உன் முகக் களையைப் பார்த்தாலே சொல்லுகிறது, நீ சத்துருவின் ஒற்றனாயிருக்க முடியாதென்று. இருந்தாலும் இந்த யுத்த காலத்தில் யாரையும் நம்பி எந்தக் காரியமும் செய்வதற்கில்லை. நல்லது, குதிரை மேல் ஏறிக்கொள். பேசிக் கொண்டே போகலாம்!" என்று கூறி அவ்வீரன் தன் குதிரையண்டை சென்று அதன் மேல் வெகு லாகவமாய்த் தாவி ஏறிக் கொண்டான்.

பரஞ்சோதி தனக்குள், 'இவனுடன் பேச்சு என்ன வேண்டிக் கிடந்தது? இந்த மலைப் பாதையைத் தாண்டியவுடன் இவனை ஒரு கை பார்த்து இவனுக்குப் புத்தி கற்பிக்காமல் விடக் கூடாது' என்று எண்ணிக் கொண்டே தன் குதிரை மீது ஏறிக் கொண்டான்.

மாலை மயங்கி இருளாகக் கனிந்து கொண்டிருந்த முன்னிரவு நேரத்தில் வானமெல்லாம் வைரச் சுடர்களென மின்னத் தொடங்கியிருந்த நட்சத்திரங்களின் இலேசான வெளிச்சத்தில் இரு குதிரைகளும் சேர்ந்தாற்போல் போகத் தொடங்கின.

### முப்பதாம் அத்தியாயம்

## மயூரசன்மன்

அந்தக் காட்டு மலைப் பாதையில் சற்று நேரம் குதிரைகள் மெதுவாகக் காலடி வைக்கும் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் எதுவும் கேட்கவில்லை.

பிரயாணிகள் இருவரும் மௌனத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

பரஞ்சோதியின் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. பெரிய மீசையுடனும், பிரம்மாண்டமான தலைப்பாகையுடனும் தன் பக்கத்தில் குதிரை மீது வரும் மனிதன்

யாராயிருக்கும்? அவன் போர் முறைகளில் கைதேர்ந்த மகாவீரன் என்பதில் சந்தேகமில்லை. சற்று நேரத்துக்குள் தன்னை என்ன பாடுபடுத்தி வைத்து விட்டான்? சடக்கென்று குதிரை மேலிருந்து தன்னை அவன் இழுத்துக் கீழே தள்ளியதையும், மார்பின் மேல் ஒரு கண நேரம் மலைபோல் உட்கார்ந்திருந்ததையும், மறுபடியும் தான் எதிர்பாராத சமயத்தில் திடீரென்று கீழே தள்ளி இரும்புக் கையினால் தன் கழுத்தைப் பிடித்து நெரித்ததையும் நினைக்க நினைக்கப் பரஞ்சோதிக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கின. அதே சமயத்தில் மேற்கூறிய செயல்களில் அந்த வீரன் காட்டிய லாகவமும் தீரமும் சாமர்த்தியமும் அந்த வீரனிடம் பய பக்தியை உண்டுபண்ணின. ஆஹா! இப்படிப்பட்ட ஒரு மகா வீரனுடைய சிநேகம் தனக்கு நிரந்தரமாகக் கிடைக்குமானால் அது எப்பேர்ப்பட்ட பாக்கியமாயிருக்கும்?

திருச்செங்காட்டாங்குடியி லிருந்து காஞ்சிக்கு வந்தபோது வழியில் சிநேகமான புத்த பிக்ஷுவுக்கும், இந்த வீரனுக்கும் எவ்வளவு வித்தியாசம்? பிக்ஷு தன்னிடம் எவ்வளவோ அன்பாகப் பேசியிருந்தும், எவ்வளவோ ஒத்தாசை செய்திருந்தும், அவரிடம் தனக்கு ஏற்படாத பக்தியும் வாத்ஸல்யமும் தன்னைக் கீழே தள்ளி மேலே உட்கார்ந்த இந்த மனிதனிடம் உண்டாகக் காரணம் என்ன?

அதே சமயத்தில், அவன் கிளம்பும்போது புத்த பிக்ஷு கூறிய எச்சரிக்கை மொழிகளும் நினைவுக்கு வந்தன. ''வழியில் சந்திக்கும் யாரையும் நம்பாதே! சத்துருவாக நடித்தாலும் மித்திரனாக நடித்தாலும் நீ போகுமிடத்தையாவது, ஓலை கொண்டு போகும் விஷயத்தையாவது சொல்லிவிடாதே! அஜந்தா வர்ண இரகசியத்தை அறிந்து கொள்ள ஆசை கொண்டவர்கள் ஆயனரைத் தவிர இன்னும் எவ்வளவோ பேர் உண்டு. அதற்காக அவர்கள் உயிர்க் கொலை செய்யவும் பின்வாங்க மாட்டார்கள். எனவே, நீ போகும் காரியம் இன்னதென்பதைப் பரம இரகசியமாக வைத்துக் காப்பாற்ற வேண்டும். அதை உன்னிடமிருந்து தெரிந்து கொள்வதற்குப் பலர் பலவிதமான சூழ்ச்சிகளைச் செய்யலாம். அதிலெல்லாம் நீ ஏமாந்து விடக் கூடாது.....''

இவ்விதம் புத்த பிக்ஷு கூறியதைப் பரஞ்சோதி நினைவுகூர்ந்து ஒருவேளை தன் அருகில் அப்போது வந்துகொண்டிருப்பவன் அத்தகைய சூழ்ச்சிக்காரர்களில் ஒருவன்தானோ, தன்னைக் குதிரையிலிருந்து கீழே இழுத்துத் தள்ளிப் படாத பாடு படுத்தியதெல்லாம் ஒருவேளை பிக்ஷுவின் ஓலையைக் கவர்வதற்காகச் செய்த பிரயத்தனமோ என்று எண்ணமிட்டான். ஓலை தன் இடைக் கச்சுடன் பத்திரமாகக் கட்டப்பட்டிருப்பதைத் தொட்டுப் பார்த்துத் தெரிந்து கொண்டு, அதைத் தன்னிடமிருந்து கைப்பற்றுவது எளிதில்லை என்று உணர்ந்து தைரியம் அடைந்தான்.

அப்போது சற்றுத் தூரத்தில் ஒரு நரி சோகமும் பயங்கரமும் நிறைந்த குரலில் ஊளையிடும் சத்தம் கேட்டது. அடுத்த நிமிஷத்தில் முறை வைப்பது போல் அநேக நரிகள் சேர்ந்தாற்போல் ஊளையிடும் சத்தம் கேட்கத் தொடங்கிய போது பரஞ்சோதிக்கு உரோமம் சிலிர்த்துத் தேகமெல்லாம் வேர்த்தது. ஒரு கூட்டம் நரிகளின் ஊளை நின்றதும் இன்னொரு கூட்டம் ஊளையிட ஆரம்பிக்கும். இவ்விதம் நரிகள் கூட்டம் கூட்டமாக முறை வைத்து ஊளையிடும் சத்தமும், அந்த ஊளைச் சத்தமானது குன்றுகளில் மோதிப் பிரதிபலித்த எதிரொலியுமாகச் சேர்ந்து அந்தப் பிரதேசத்தை யெல்லாம் விவரிக்க முடியாத பயங்கரம் நிறைந்ததாகச் செய்தன.



இத்தனை நேரமும் மௌனமாய் வந்த வீரன், '' தம்பி! இப்பேர்ப்பட்ட காட்டு வழியில் முன்னிருட்டு நேரத்தில் தன்னந் தனியாக நீ புறப்பட்டு வந்தாயே; உன்னுடைய தைரியமே தைரி

யம்! என் நாளில் எத்தனையோ தடவை நான் தனி வழியே பிரயாணம் செய்திருக்கிறேன். அப்படிப்பட்ட எனக்கே இந்தப் பிரதேசத்தில் சற்று முன்னால் சித்த கலக்கம் உண்டாகி விட்டது!'' என்றான்.

அப்போது பரஞ்சோதி சிறிது தயக்கத்துடன், ''ஐயா! என்னைக் கண்டதும் தாங்கள் 'பிசாசு! பிசாசு!' என்று அலறிக் கொண்டு குதிரைமேலிருந்து விழுந்தீர்களே அது என்? உண்மையாகவே பயப்பட்டீர்களா? அல்லது என்னைக் கீழே தள்ளுவதற்காக அப்படிப் பாசாங்கு செய்தீர்களா? சற்று முன்னால் அப்படி



அலறி விழுந்தவர், இப்போது கொஞ்சம்கூடப் பயப்படுவதாகத் தெரியவில்லையே!'' என்றான்.

''ஆஹா! அது தெரியாதா உனக்கு? ஒருவன் தனி மனிதனாயிருக்கும் வரையில் ஒரு பிசாசுக்குக்கூட ஈடு கொடுக்க முடியாது. தனி மனிதனைப் பிசாசு அறைந்து கொன்று விடும். ஆனால், இரண்டு மனிதர்கள் சேர்ந்து விட்டால், இருநூறு பிசாசுகளை விரட்டியடித்து விடலாம்! இந்த மலைப் பிரதேசத்தில் இருநூறாயிரம் பிசாசுகள் இரா வேளைகளில் 'ஹோ! ஹோ!' என்று அலறிக் கொண்டு அலைவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவ்வளவு பிசாசுகளும் சேர்ந்து வந்தாலும், இரண்டு மனிதர்களை ஒன்றும் செய்ய முடியாது! தம்பி! இந்தப் பிரதேசத்தைப் பற்றிய கதை உனக்குத் தெரியுமா?'' என்று குதிரை வீரன் கேட்டான்.

''தெரியாது; சொல்லுங்கள்!'' என்றான் பரஞ்சோதி.

அதன்மேல் அந்த வீரன் சொல்லிய வரலாறு பின்வருமாறு:

ஏறக்குறைய இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் வட தேசத்திலிருந்து வீர சன்மன் என்னும் பிராம்மணன் தன் சீடனாகிய மயூர சன்மன் என்னும் சிறுவனுடன் காஞ்சிமா நகருக்கு வந்தான். அவ்விருவரும் ஏற்கெனவே வேத சாஸ்திரங்களில் மிக்கப் பாண்டித்தியம் உள்ளவர்கள். ஆயினும் காஞ்சிமா நகரின் ஸம்ஸ்கிருத கடிகை (சர்வ கலாசாலை)யைச் சேர்ந்த மகா பண்டிதர்களால் ஒருவருடைய பாண்டித்தியம் ஒப்புக்கொள்ளப்பட்ட பிறகு தான் அந்தக் காலத்தில் வித்தை பூர்த்தியானதாகக் கருதப்பட்டது. அதற்காகவே வீரசன்மனும் மயூர சன்மனும் காஞ்சிக்கு வந்தார்கள். ஒரு நாள் அவர்கள் காஞ்சியின் இராஜ வீதி ஒன்றில் போய்க் கொண்டிருந்தபோது, பல்லவ மன்னனின் குதிரை வீரர்கள் சிலர் எதிர்ப்பட்டார்கள். வீதியில் நடந்த வண்ணம் ஏதோ ஒரு முக்கியமான சர்ச்சையில் ஈடுபட்டிருந்த குருவும் சிஷ்யனும் குதிரை வீரர்களுக்கு இடம் கொடுத்து விலகிக் கொள்ளவில்லை. இதனால் கோபம் கொண்ட குதிரை வீரன் ஒருவன் குதிரை மேலிருந்தபடியே வீரசன்மனைக் காலால் உதைத்துத் தள்ளினான். குருவுக்கு இத்தகைய அவமானம் நேர்ந்ததைக் கண்டு சகியாத சிஷ்யன் அந்த வீரன் கையிலிருந்த வாளைப் பிடுங்கி வீசவே அவன் வெட்டுப்பட்டுக் கீழே விழுந்தான். மற்றக் குதிரை வீரர்கள் மயூரசன்மனைப் பிடிக்க வந்தார்கள். அவர்களிடம் அகப்பட்டால் தன் உயிருக்கு ஆபத்து நேரும் என்பதை அறிந்த மயூர சன்மன் கையில் பிடித்த வாளுடன் கீழே விழுந்த வீரனின் குதிரை மீது தாவி ஏறித் தன்னைப் பிடிக்க வந்தவர்களையெல்லாம் வீராவேசத்துடன் வெட்டி வீழ்த்திக் கொண்டு காஞ்சி நகரை விட்டு வெளியேறினான்.

பல்லவ ராஜ்யத்துக்கே அவமானம் விளைவிக்கத் தக்க இந்தக் காரியத்தைக் கேட்டு, மயூரசன்மனைக் கைப்பற்றி வருவதற்காக இன்னும் பல குதிரை வீரர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். ஆனால் அவர்களிடம் அவன் அகப்படவில்லை. கடைசியில், மயூர சன்மன் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ள ஸ்ரீபர்வதத்தை அடைந்து, அங்கேயுள்ள அடர்ந்த காட்டில் சிறிது காலம் பல்லவ வீரர்களுக்குப் பயந்து ஒளிந்து வாழ்ந்



தான். பின்னர், அந்தப் பிரதேசத்தில் வாழ்ந்த மலைச் சாதியாரைக் கொண்டு ஒரு பெரிய சைனியத்தைத் திரட்டியதுமல்லாமல் அங்கே சுதந்திர ராஜ்யத்தையும் ஸ்தாபித்தான். பின்னர், அந்தப் பெரிய சைனியத்துடனே, காஞ்சியில் தன் குருவுக்கு நேர்ந்த அவமானத்துக்குப் பழி வாங்கும் பொருட்டுப் புறப்பட்டு வந்தான். மயூர சன்மனின் சைனியமும் காஞ்சிப் பல்லவ சைனியமும் இந்த மலைக்காட்டுப் பிரதேசத்திலே தான் சந்தித்தன. ஏழு நாட்கள் இடைவிடாமல் யுத்தம் நடந்தது. ஆயிரக்கணக்கான வீரர்கள் போரில் மாண்டார்கள். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி மலைப் பிரதேசத்தையெல்லாம் நனைத்தது.

அப்படி இரத்த வெள்ளம் ஓடிய இடத்திலேதான் சில காலத்துக்குப் பிறகு இந்தப் புரசங் காடு முளைத்தது. மேற்சொன்ன பயங்கர யுத்தம் நடந்த அதே பங்குனி மாதத்தில் ஒவ்வொரு வருஷமும் புரச மரங்களின் இலைகள் உதிர்ந்து இரத்தச் சிவப்பு நிறமுள்ள பூக்கள் புஷ்பிக்கின்றன. அந்தப் போரில் இறந்து போன ஆயிரக்கணக்கான வீரர்களின் ஆவிகள் இன்னமும் இங்கே உலாவிக்கொண்டிருப்பதாக அக்கம் பக்கத்துக் கிராம ஜனங்கள் நம்புகிறார்கள். ஆவிக் குதிரைகளின் மீது ஏறிய ஆவி வீரர்கள் வாள்களையும் வேல்களையும் ஏந்தி, 'ஹா ஹா' என்று கூவிக்கொண்டு இந்த நிர்ஜனப் பிரதேசத்தில் அலைவதாகவும், யாராவது பிரயாணிகள் இரவு வேளையில் தனி வழியே வந்தால் அவர்களைக் கொன்று இரத்தத்தைக் குடித்துத் தாகத்தைத் தணித்துக் கொள்வதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்!

* * *

மேற்படி வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்த பரஞ்சோதிக்குக் கொஞ்சம் நஞ்சம் பாக்கியிருந்த பயமும் போய்விட்டது. அங்கே ஆவிகள் அலைவது பற்றிய கதையெல்லாம் வெறும் மூட நம்பிக்கை என்ற உறுதி ஏற்பட்டது. ''என்னைக் கண்டதும் இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன் செத்துப் போன வீரனின் பிசாசுதான் வந்து விட்டதென்று நினைத்து அப்படி உளறி அடித்துக்கொண்டு விழுந்தீரோ?'' என்று கூறி நகைத்தான்.

''இரத்தமும் சதையுமுள்ள மனிதனோடு நான் சண்டை போடுவேன். வில் போர், வாள் போர், வேல் போர், மல்யுத்தம் எது வேண்டுமானாலும் செய்வேன். ஆனால், ஆவிகளோடு யார் போரிட முடியும்?'' என்று அவ்வீரன் சிறிது கடுமையான குரலில் கூறவே பரஞ்சோதி பேச்சை மாற்ற எண்ணி ''இருக்கட்டும், ஐயா! இங்கே நடந்த யுத்தத்தின் முடிவு என்ன ஆயிற்று? யாருக்கு வெற்றி கிடைத்தது?'' என்று கேட்டான்.

''மயூரசன்மனுடைய சைனியத்தைப் போல் பல்லவ சைனியம் மூன்று மடங்கு பெரியது. ஆகையால், பல்லவ சைனியம் தான் ஜயித்தது. 'மயூரசன்மனை உடம்பில் முப்பத்தாறு காயங்களுடன் கைப்பற்றிப் பல்லவ மன்னன் முன் கொண்டு வந்து நிறுத்தினார்கள்...!''

''அதன் பிறகு என்ன நடந்தது?'' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் பரஞ்சோதி.

''என்ன நடந்திருக்குமென்று நீதான் சொல்லேன்!'' என்று அவ்வீரன் கூறிப் பரஞ்சோதியின் ஆவலை அதிகமாக்கினான். (தொடரும்)

---

ஓய்வா? மூச்!



ஜப்பானிய மொழியில் 'உழைப்பு' என்பதற்கு நிறைய வார்த்தைகள் உள்ளன. ஆனால் 'ஓய்வு' என்பதற்கு ஒரு வார்த்தைகூடக் கிடையாது. இப்பொழுது தான் 'ரீஜா' (ஓய்வு) என்ற வார்த்தையை அகராதிகளில் சேர்த்திருக்கிறார்கள். ஆதாரம்: டெக்கான் ஹெரால்ட் — பா



அரும் பெரும்

குடங்களிடையே

நிறைகுடம் !

அன்பு நாண் ஒப்புரவு
கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்து சால்பு ஊன்றிய தூண்

—குறள்

நவம்பர் 14- பண்டிதரின் பிறந்த தினம்

(புகைப்படம்: அனந்த்)

# மைக்ரோஃபைன்ட்

# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனுல்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது—

**சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.**









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ:.பைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • :.ப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோ:.பைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.57 TM

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 மார்ச், 10உ**

வெள்ளிக்கிழமை: சென்ற திங்கட்கிழமையன்று மிகவும் துன்பகரமான காரியம் ஒன்று நிகழ்ந்து விட்டது. ஞாயிற்றுக்கிழமை மாலையும் திங்கட்கிழமை காலையும் என் காலைக் காட்டுவதற்காக ஆஸ்பத்திரிக்குப் போனேன். திங்கட்கிழமை காலையில் ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கும் கைதி தேவன் என்பவர் ஆபரேஷன் செய்யும் அறையில் எங்களுக்கு ஒத்தடம் கொடுத்தார். அப்பொழுது வாயாடி ரங்கம் செட்டி ஜன்னலுக்கு வெளியே நின்றுகொண்டு நோய் காரணமாகத் தம்மை விடுதலை செய்யும்படி சிபாரிசு செய்வதாகச் சிறைத் தலைமை அதிகாரி கூறியதாக என்னிடம் அநாவசியமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவர் பேசியது அநாவசியம் என்பதற்கு இரண்டு காரணங்கள். எவ்வித நிபந்தனையின் பேரிலும் அவர் விடுதலை பெறுவதை நான் விரும்பவில்லை என்பதாக அவர் ஏற்கனவே அறிவார், அது ஒரு காரணம். அன்று அவர் ஆஸ்பத்திரியிலிருந்து நான் இருக்கும் பகுதிக்கு மாற்றப்படப் போவதால் ஆஸ்பத்திரியில் சந்தித்து என்னிடம் பேசித் தீர வேண்டிய அவசரம் எதுவுமில்லை, இது இரண்டாவது காரணம்.

'என்னை விடுதலை செய்வதாகச் சொல்லுகிறார்களே, அதைப் பற்றித் தாங்கள் யாதொரு யோசனையும் கூறாதிருக்கிறீர்களே' என்று அவர் என்னிடம் கேட்டார். அதற்கு நான், ''சும்மா விடுதலை செய்து விடமாட்டார்கள், ஏதேனும் நிபந்தனை எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் தான் நோய் காரணமாக விடுதலை செய்வார்கள்'' என்று கூறினேன்.

''அப்படி நான் எதிலும் கையெழுத்திட்டுக் கொடுக்க மாட்டேன்'' என்று அவர் பதில் கூறினார்.

சிறிது நேரம் கழிந்தபின் அவர் தலைமை அதிகாரியிடம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததாகவும் அப்பொழுது நோய் காரணமாக விடுதலை செய்வதானால் ஏதேனும் நிபந்தனை எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுக்க வேணுமோ என்று கேட்டதாகவும் தெரிகிறது. நிபந்தனை விஷயம் யார் கூறினார்கள் என்று சிறைத் தலைமை அதிகாரி கேட்டதற்கு நான் கூறியதாக ரங்கம் செட்டி கூறினாராம். நான் ரங்கம் செட்டியுடன் பேசிக் கொண்டிருந்ததாக அறிந்ததும் அதிகாரிக்குக் கோபம் வந்துவிட்டது. ரங்கம் செட்டி அன்றே என் பகுதிக்கு வருவதாக இருந்த போதிலும், ஆஸ்பத்திரியில் சற்றுப் பேசியது சிறை விதிகளுக்கு விரோதமேயாகும். அதனால் எங்களை ஆஸ்பத்திரிக்கு இட்டுச் சென்றது யார் என்று அதிகாரி தலைமை வார்டரிடம் கேட்டார். எங்களை ஞாயிற்றுக் கிழமையன்று நாதமுனி அழைத்துக் கொண்டு போனதாகத் தலைமை வார்டர் கூறினார். அதன்மேல் நாதமுனியைக் கேட்டதற்குத் தாம் அழைத்துக்கொண்டு போனபோது பேசவில்லை என்று எடுத்துக் கூறியும் அதைக்



கேளாது அதிகாரி அவருக்குத் தண்டனை கொடுத்து விட்டார். இந்த விவரத்தைக் கேட்டதும் நான் திடுக்கிட்டுப் போனேன். அது முற்றிலும் அநீதியாகும். நாதமுனி என்னுடன் வந்தது ஞாயிற்றுக்கிழமை மாலை. அன்று ஒன்றுமே நடைபெறவில்லை. ரங்கம் செட்டி வந்து வம்பளந்தது திங்கட்கிழமை காலையில்தான். அதனால் நான் அதிகாரியிடம் புதன்கிழமை சென்று நடந்த விவரத்தைக் கூறினேன். நாதமுனியைத் தண்டித்தது தவறுதான் என்று ஒப்புக் கொண்டு தண்டனையை ரத்து செய்வதாக அவர் கூறினார். நாதமுனி இந்தச் சிறையில் உள்ள வார்டர்களில் ஒழுங்கானவரும் திறமை உள்ளவருமாவார். அதனால் அவருக்கு என்னை முன்னிட்டுத் தீங்கு உண்டாவதை நான் விரும்பவில்லை.



# கோபுரக் குடியிருப்பு

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை போன்ற நகரங்களில், மாடி போர்ஷனில் குடி வர விரும்புவோர் குறைவு. அதனால் வீட்டுச் சொந்தக்காரர் மாடியில் இருந்து கொண்டு கீழ்ப் பகுதியை வாடகைக்கு விடுவார்! இன்று பல மாடிக் குடியிருப்பு சகஜமாகி வருகிறது. வெளிநாடுகள்போல், பம்பாயைப் போல், தமிழ் நாட்டிலும் 'டவர்' எனப்படும் எட்டு மாடி, பத்து மாடிக் கட்டடங்கள் தோன்றியுள்ளன. இவை மேலும் பெருகும் வாய்ப்பும் காணப்படுகிறது.

நந்தனத்தில் அடையாறு ஓரத்தில் உயர் அதிகாரிகளுக்கு என்று எட்டு ஆண்டுகளுக்கு முன்பு எழுந்த எட்டு அடுக்கு மாளிகைதான் இந்த வரிசையில் சென்னையில் முதல் அமைப்பு. அதைத் தொடர்ந்து, அந்தக் கட்டடத்தின் கிழக்கே, டர்ன்புல் ரோட்டில் பத்து மாடிக் கோபுரக் குடியிருப்பு எழுந்து ஆறு ஆண்டுகளாகிறது. இவை இரண்டும் வீட்டு வசதி வாரிய அமைப்புக்கள். இவை இரண்டிலுமாக 108 குடித்தனங்கள் உள்ளன. இன்று அடையாற்றின் தென் கரையில் மூன்றும், எழும்பூரில் சிலவுமாகக் கோபுரக் குடியிருப்புகள் எழுந்து வருகின்றன. சென்னை வீட்டு வசதி வாரியத்தினரே இன்னும் நான்கு கோபுரக் குடியிருப்புக்களை அமைக்கும் திட்டத்தை மேற்கொண்டிருக்கிறார்கள் எனத் தெரிகிறது.

☐ பல மாடிக் கட்டடங்கள் என்றால் அவை பணக்காரக் குடும்பங்களுக்குத்தான் என்று எண்ண வேண்டியதில்லை. இப்போது குடிசை மாற்றுவாரியக் கட்டடங்கள் பலவும் நான்கு மாடிக் கட்டடங்கள்தான். எட்டு மாடி, பத்து மாடிக் கட்டடங்களில் உள்ள அலுவலகங்களில் தினம் பல மணி நேரம் வாழ்ந்து பணியாற்றிப் பழக்கமான நடுத்தர மக்களுக்குக் கோபுரக் குடியிருப்பும் பழக்கமாகி விடுகிறது. சென்னை போன்ற பெரு நகரங்கள் நீளத்திலும் அகலத்திலும் வளர்வது போதாதென்று, உயரத்திலும் வளரத் தொடங்குகின்றன.

☐ எந்தப் புதிய அமைப்பிலும் உள்ளது போலவே, கோபுரக் குடியிருப்புக்களிலும் வசதிகளும் உள்ளன; அசௌகரியங்களும் இருக்கின்றன. வானை நோக்கி எழும்பும் இந்தக் கட்டடங்களில் காற்றும் வெளிச்சமும் நிறைய உண்டு. காற்று என்பது பல சமயம் பேய்க் காற்றாக இருக்கிறது! எல்லாக் கதவுகளையும் சாத்தி வைத்தாலும்கூடக் கதவிடுக்கில் நுழையும் காற்றுப் போடும் சத்தம்கூடத் தனி இரைச்சலாக ஒலிக்கிறது!

☐ ஐம்பது அறுபது குடித்தனங்கள் ஒரே கட்டடத்தில் இருந்தாலும், கட்டட அமைப்பின் தனித் தன்மையால் ஒவ்வொரு குடித்தனமும் தனி வீட்டில் இருப்பதுபோன்ற அமைதியையும் அனுபவத்தையும் கொள்ள முடியும். ஐம்பது அறுபது வீடுகள் கொண்ட ஒரு தெருவே ஒரு கட்டடத்தில் அடங்கிவிடுகிறது. ஆனால் தெருப் புழுதிதான் இல்லை!

☐ பல மாடிக் குடியிருப்புக் கட்டடங்கள் மின்சாரத்தை அதிகம் நம்பியிருக்கின்றன. மின்விசை இன்றேல் 'லிப்ட்' இல்லை. 'லிப்ட்' இல்லாவிட்டால் பத்து மாடி ஏறுவது யார்? மோட்டார் பம்பு இன்றேல் நீர் ஏது? நீர் இன்றி எதுதான் அமையும்? எனவே தடையற்ற மின்வசதிக்கு எல்லாக் கோபுரக் குடியிருப்பிலும் ஏற்பாடு செய்கிறார்கள். அன்றும்

■ பத்து மாடிகளில் உள்ள அறுபது குடித்தனக்காரர்களின் விவரம் தெரிவிக்கிறார்கள் காவலர்கள்.



■ அடையாற்றின் தென் கரையில் எழும்பும் கோபுரக் குடியிருப்புகள்.







■ 'லிப்ட்' பழுதாகி விட்டால் இருநூறு படியானாலும் ஏற வேண்டியதுதான்!

■ எட்டாவது மாடியில் கொட்டும் குப்பையை அடித்தளத்தில் தெருமல் அள்ள முடிகிறது.

பகலும் இருபத்துநான்கு மணி நேரமும் லிப்ட் வசதி செய்து கொடுக்கிறார்கள். தனியார் துறையில் புதிதாக எழும்பும் கோபுரக் குடியிருப்புகளுக்கு, மின்வாரிய விசையோடு அவசரக் காலத்துக்கு என்று தனி 'ஜெனரேட்டர்' பொருத்தவும் செய்கிறார்கள்!

□ வெளிப் பார்வைக்குக் கல் கட்டடமாகத் தோன்றும் இவை இரும்பு — எஃகு பலத்திலுல்தான் எழும்பி நிற்கின்றன. இவற்றைத் தாங்குபவை சுவரே அல்ல! பல நூறு எஃகுக் கம்பிக் கம்பங்களே, பந்தல்கால் போல் பொருத்திக் கட்டும்போது பார்த்தால் இவை குடியிருப்புத்தானு என்ற வியப்புத்தான் உண்டாகும்.

இப்படிப்பட்ட பல மாடி இல்லங்களில் குடி வருவோருக்கு முதலில் ஏதோ மாதிரி இருந்தாலும் விரைவில் பழகிவிடுகிறார்கள். உச்சி மாடிகளிலிருந்து எட்டிப் பார்க்கக் குழந்தைகள் பயப்படுவதில்லை. காயப் போட்ட சில சேலைகளைக் காற்றுத் தேவன் பறித்துச் சென்றதும், அயராத கவனத்துடன் இருக்க வேண்டிய பயிற்சி குடும்பத் தலைவிக்கு வந்து விடுகிறது!

□ பல மாடிக் குடியிருப்பில் வாழும்போது பல விஷயங்களிலும் முன்னெச்சரிக்கை அவசியம். ''கீழே போகும் 'லிப்ட்' மறுபடியும் மேல் ஏறி வந்து நம்மை அழைத்துப் போக போதிய அவகாசம் கொடுத்துப் புறப்பட வேண்டும். அப்படிக் கீழே போன பிறகு கார் சாவியைக் கொண்டு வர மறந்து விட்டதை அறிந்தால் எப்படி? மறுபடியும் போய் வர எவ்வளவு நேரம் வீண்?'' என்கிறார் ஒரு குடித்தனக்காரர். இந்தக் கவலைகள் சில முறை சுட்டுப்பட்டு வரும் பயிற்சிகள்.

□ சாதாரண இல்லங்களில் இருப்போரைப் போல் கோபுரக் குடியிருப்புவாசிகள் சன்னல் வழியே குப்பையை வெளியே எறிய முடியாது. கூடாது. அதற்காக, குப்பையைக் கொட்டப் பல நூறு படிகள் இறங்கி வரவும் வேண்டாம். ஒவ்வொரு மாடியிலும் குப்பையைக் கொட்டுவதற்கு என்று ஒரு சாதனம் இருக்கிறது. அலமாரி போல் உள்ள அதன் கதவைத் திறந்து, குப்பையைக் கொட்டி விட்டால் போதும். அப்படிச் சேருவதை, கீழ்த்தளத்தில் மொத்தமாக வாரிக் கொள்ள ஏற்பாடு உண்டு.

□ நகரங்களுக்குப் பெருமை தேடித் தரும் இந்தப் பெரிய விலைமதிப்புள்ள கோபுரங்களைப் பாதுகாப்பது ஒரு முழு நேர வேலை. அவரவர் இல்லங்களை அவரவர் சுத்தமாக வைத்துக் கொண்டாலும், நடைபாதைகளையும் மாடிப் படிகளையும் சுத்தப்படுத்த மின்சாரக் கோளாறு ஏற்பட்டால் கவனிக்க, குழாய் ரிப்பேர் செய்ய, லிப்ட் ஓட்ட, மற்றும் பொதுப் பணிகளைக் கவனிக்க என்று பல பணியாளர்களை வீட்டு வசதி வாரியத்தினர் நியமித்துள்ளனர். (இந்த நடைமுறைச் செலவுகளையும் சேர்த்துத்தான் வாடகை கணக்கிடப்படுகிறது!) இவ்வளவு பெரிய அளவில், பெருஞ் செலவில் திட்டமிட்டுக் கட்டியும் குடித்தனக்காரர்கள் எல்லோருக்கும் கார், ஸ்கூட்டர், சைக்கிள்களைப் பாதுகாத்துக் கொள்ள வசதி போதாது. இங்கு பணியாற்றும் பணியாளர்களுக்கு அடிப்படை சுகா

நந்தனம் டவர்பிளாக் குடியிருப்பிலிருந்து பரந்த தோற்றம். அடையாறும் கோட்டூர் குடியிருப்பும் தெரிகின்றன. சுமார் இருபது சதுர மைல் பரப்பை இங்கிருந்து காண முடிகிறது.



தார வசதிகள் செய்து தரப்பட்டிருக்கலாம். அதுவும் இல்லை.

□ பல மாடிக் கட்டடங்களை எழுப்பி, அதில் ஒவ்வொரு மாடியிலும் ஐந்தாறு குடித்தனங்கள் அமைத்து, அவை ஒவ்வொன்றையும் அவரவர் சொந்தமாக்கிக் கொள்ளும் வகையில் ஜே.பி நிறுவனத்தார் ஒரு கோபுரக் கட்டடம் கட்டுகிறார்கள். வீட்டு வசதி வாரியம் போன்ற அமைப்பில் கட்டடப் பராமரிப்பை வாரியமே பார்த்துக் கொள்ளும்; இந்தச் 'சொந்தக்காரர்' குடியிருப்பிலோ கூட்டுறவு முயற்சியில் பராமரிப்பைப் பார்த்துக் கொள்ள வேண்டும். ''மேலே கூரை எனக்குச் சொந்தமில்லை. மற்றொருவர் வீட்டு அடித்தளம் அது; கீழே என் வீட்டு அடித்தளம் இன்னொருவர் கூரை, ஆனால் இது என் சொந்த வீடு!'' என்று வேதாந்தமாயும் நகைச்சுவையாயும் விளக்கிப் பராமரிப்புச் செலவிலிருந்து தப்ப முயலக் கூடாது.

'உயர இருக்கையில் விரிந்து பரந்த காட்சிகள் தெரிகின்றன. இவ்வளவு விரிந்த சூழ்நிலையில் நமது சிறுமை புலப்பட்டு, அடக்கம் வருகிறது' என்கிறார் ஒரு கோபுரக் குடிவாசி.

— தம்பி சீனிவாசன்

# படித்துப் பாருங்கள்!

## பஞ்ச மரபு (முதற் பகுதி)

சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் இசை நுணுக்கங்களை விளக்கும்பொழுது உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் இசை நுணுக்கம், இந்திரகாளியம், பஞ்சமரபு, பரத சேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் ஆகிய ஐந்து இசைத் தமிழ் நூல்களைக் குறிப்பிடுகிறார். ஆயினும் இசையுலகின் துரதிர்ஷ்டவசமாக இவற்றுள் ஒன்றேனும் இதுகாறும் நமக்குக் கிடைக்கவில்லை. சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் கலாக்ஷேத்திரத்தாரால் பிரசுரிக்கப்பட்ட 'பரத சேனாபதீயம்' என்ற புத்தகம் ஆதிவாயிலார் எழுதிய பழந்தமிழ் நூல் அல்லவென்று அதன் பதிப்பாசிரியரே கூறியுள்ளார்.

ஆகவே, சங்க கால இசை, நாடக இலக்கணம் கூறும் அரிய நூலாகிய அறிவனாரின் பஞ்ச மரபின் ஏட்டுச் சுவடியை ஏடு தேடிக் காக்கும் தமிழ் அன்பராகிய எழுமாத்தூர் தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் தேடி எடுத்து, குடந்தை பண் ஆராய்ச்சி வித்தகர் சுந்தரேசனார் அவர்களின் உதவி கொண்டு அடிக் குறிப்புகளுடன் பிரசுரிக்க முனைந்தது தமிழ் இசைக்கு ஒரு சிறந்த தொண்டாகும். பிரபல தொழில் அதிபரும் கலா ரசிகருமான பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்களின் பொருளுதவியினால் சீரிய முறையில் அச்சிடப் பெற்றுள்ள இந்த முதற்பதிப்பில் பாயிரம், இசை மரபு, வாச்சிய மரபு ஆகியவை இடம் பெற்றுள்ளன. ''முந்திப் பரதன் முதலோர் மொழி வடநூற்பந்திச் செழுஞ்சுவைதப் பத்தினைப் — புந்தியுறத்—தண்டமிழால்'' அறிவனார் பாடியுள்ள இந்நூல் ஒரு சிறந்த பொக்கிஷமாகும். இம்முதற் பகுதியையும், நிருத்த மரபு, அபிநய மரபு, தாள மரபு ஆகியவை அடங்கிய இரண்டாம் பகுதியையும் தமிழிசை அன்பர்கள் ஆதரித்துப் பயனடைவர் என்று நம்புகிறோம்.

— டி. எஸ். பார்த்தசாரதி

கிடைக்குமிடம்: சக்தி அறநிலையம், 72, சென்குப்தா தெரு, இராம்நகர், கோயம்புத்தூர்—9. விலை ரூ. 7—50.

## நாடக விழா மலர்

தமிழ் நாடகக் கலையின் வளர்ச்சி இன்று மிகவும் பாராட்டும் அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்றால் அதற்கு அடிகோல் நாட்டியவர்கள் 'பரிதிமாற் கலைஞர்' என்னும் சிறப்புப் பெயருடன் விளங்கிய வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பம்மல் சம்பந்த முதலியார், சி. கன்னையா நாயுடு ஆகியோர் என்பதைத் தமிழுலகம் நன்கறியும்.

சூரியநாராயண சாஸ்திரியார் தாமே பல நாடகங்கள் இயற்றி அவற்றில் முக்கிய பாத்திரங்களைத் தாமே ஏற்று நடித்தார். பம்மல் சம்பந்த முதலியார் நாடகக் கலைக்குச் செய்திருக்கும் அரிய தொண்டுகள் அளவிடற்கரியது. பலரும் விரும்பி நடிக்கக் கூடிய பல்சுவை ததும்பும் பல்வித நாடகங்களை எழுதி, அவற்றில் தாமே நடித்து நாடகக் கலைக்குப் புத்துயிர் தேடித் தந்தார்.

புராணமான பொருட் செலவில் சின்களும் உடைகளும் தயாரித்து மேடையில் நூற்றுக் கணக்கான நடிகர்களை ஏற்றி, அந்நாளில் புதுமையான புராண, இதிகாச நாடகங்களை நடத்தி, நாடக உலகில் மாபெரும் சாதனையை ஏற்படுத்தியவர் சி. கன்னையா அவர்கள்.

இம்மும்மணிகளின் நூற்றாண்டு விழா அக்டோபர் 13ந் தேதி முதல் 15ந் தேதி வரையில் சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் அதிவிமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவை ஒட்டி, பல நடிகர்கள் பங்கு பற்றி நடித்த பல நாடகங்கள் நிகழ்ந்தன. அச்சமயம் நாடக விழா சிறப்பு மலர் ஒன்று வெளியிடப்பட்டது. அறிஞர்களின் பயனுள்ள, கருத்துக் கருவூலங்களாகப் போற்றத் தக்க கட்டுரைகளுடன் இவ்விழாச் சிறப்பு மலர் கலைமணம் கமழ வெளிவந்திருக்கிறது. பண்டைக் கால நாடகக் காட்சிகளின் புகைப் படங்கள் மலருக்கு மெருகு சேர்த்திருக்கின்றன. இவ் விழாச் சிறப்பு மலரை வெளியிடும் பொறுப்பை மேற்கொண்ட தமிழ்நாடு சங்கீத நாடக சங்கச் செயலாளர் கவிஞர் எஸ். டி. சுந்தரம் பாராட்டுக்குரியவர்.

பிரசுரம்: தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம், ''தென்றல்'', நெ. 19, கிரீன்வேஸ் ரோடு, சென்னை-28.

# சுஜாதாவுக்கு 'சிறந்த மாணவி' மெடல்! 'ஹார்லிக்ஸ்' அவளைத் துடிப்புடனும் சுறுசுறுப்புடனும் இருக்க வைக்கிறது



**நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரித்து, நாளுக்கு நாள் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கிறது.**

சுஜாதா எப்போதும் சுட்டிப்பாகவும், சுறுசுறுப்பாகவும் விளங்குகிறாள். அவள் அவ்விதம் இருப்பதற்காக அவளுடைய அம்மா அவளுக்கு தினமும் **ஹார்லிக்ஸ்** தருகிறாள். **ஹார்லிக்ஸ்** தெம்பைக் கூட்டி வலுவைப் பெருக்குகிறது; அதிக சக்தியை அளிக்கிறது. சுஜாதாவின் தாயான சுசித்ராவைப் போலவே உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் **ஹார்லிக்ஸை** நம்பியிருக்கின்றனர். சுமார் 100 ஆண்டு காலமாக டாக்டர்கள் **ஹார்லிக்ஸை** சிபாரிசு செய்து வந்திருக்கின்றனர்.

"உடல்நலத்திற்கு மிகவும் உதவக்கூடிய சத்து நிறைந்த உணவுப் பொருள்கள் **ஹார்லிக்ஸில்** இருக்கின்றன. தவிர **ஹார்லிக்ஸ்** எளிதில் ஜீரணமாகும். எனக்குத் தெரிந்த ஆரோக்கியம் மிக்க குடும்பத்தினர் தினமும் **ஹார்லிக்ஸ்** அருந்துகிறார்கள்."




'ஹார்லிக்ஸ்' — பதிவு பெற்ற ட்ரேட் மார்க்

HL-6585A-TAM3

## முழுமையான ஊட்டம்பெற ஹார்லிக்ஸ்




## 31. மனக் கோட்டை மண்ணாகுமா?

**வே**தமூர்த்தி அவரை விஷமப் புன்னகையுடன் ஏறிட்டுப் பார்த்து, ''ஆமாம்; ஏதோ உனக்குப் பந்த பாசம்; சொந்தம் உறவு எதுவும் கிடையாதுன்னு சற்று முன்னால் சொன்னாயே, இப்போ இம்மாதிரியான காரியங்கள் எல்லாம் செய்யறதுக்கு என்ன பேராம்?'' என்று கேட்டார்.

சேதுபதியின் முகம் வெளிறிச் சிறுத்தது. சில விநாடிகள் மௌனமாய் இருந்த அவர், ''அப்படி இல்லே, வேது! ரொம்பக் காலமாய் என் நெஞ்சிலே சுமந்துகிட்டிருக்கிற ஒரு பெரிய வேதனைச் சுமையை இறக்கிப் போடறதுக்காகத்தான் இந்தக் காரியத்தில் ஈடுபட்டேன். என்னாலே ஓர் இளம் பயிரின் வாழ்க்கை வீணாகிவிட்டது என்கிற பழிச் சொல்லுக்கு ஆளாகக் கூடாது — ஏற்கனவே தீர்க்க முடியாத அளவு ஏற்றுக்கிட்டிருக்கிற பழிகள் போதும் — என்கிறதுக்காகவும், பத்தொன்பது வருஷங்களுக்கு முன்னால் உன்னைச் சாட்சியாக வைச்ச அந்தப் பாக்கியத்துக்கு நான் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றி என்னை ஒரு பெரிய இக்கட்டிலிருந்து விடுவித்துக் கொள்கிறதுக்காகவுமே இப்படிச் செய்தேன். இதுகளோடுகூட இன்னொரு முக்கியமான காரணமும் இருக்கிறது. அது.... அது.... என்னிக்காவது ஒரு நாள், என்னுடைய லட்சிய வெறியெல்லாம் அடங்கி ஒடுங்கி, இனி எதற்கும் உதவமாட்டேன் என்கிற நிலைமை ஏற்படும்போது — அது வரை என் உயிர் இந்த உடம்பிலே ஒட்டிக் கொண்டிருந்தால் நான் எனது பிறந்த மண்ணிலே போய்த் தலை சாய்க்கவும், அங்கே எனக்காக நீண்ட நெடுங்காலமாய்த் தவம் செய்துகிட்டிருக்கிற ஒரு தெய்வப் பெண்மணியின் மாசற்ற முகத்தைப் பயமில்லாமல் தரிசிக்கவும் ஆன வழிகளை இப்பவே நேராக்கிச் சுத்தப்படுத்தி வைச்சுடணும் என்பதுதான் அது.....'' என்று சொல்லி முடிப்பதற்குள் தொண்டை அடைத்துக் கொள்ள, நாற்காலியில் மெல்லச் சாய்ந்தார்.

சில நிமிடங்களுக்குப் பின் திடுமென்று எதையோ நினைத்துக் கொண்டவர் போல் அவசரமாக நிமிர்ந்த அவர், ''அது சரி, வேது! என் மகன் நரகுவுக்கு இந்தப் புஷ்பசுகந்தி யார் என்கிற விஷயம் தெரியுமா?'' என்று கேட்டார், குரலில் ஒருவித அச்சம் தொனிக்க.

''ஓரளவு தெரியும்'' என்றார் வேதமூர்த்தி குறுஞ்சிரிப்புடன்.

''ஓரளவுன்னா?''

''அவள் பாக்கியத்தம்மாளின் மகள் என்பது மட்டும் தெரியும்.''

''நீதான் தெரியப்படுத்தினாயா?''

''ஆமாம்; நேரிடையா யில்லே; பாக்கியத்தம்மாள் எனக்கு எழுதின கடிதத்தின் வாயிலாக.''

''எதற்காக இப்படிச் செய்தே வேது?'' என்று படபடத்தார் சேதுபதி.

சற்றுத் தயங்கிவிட்டுப் புன்னகையுடன் சொன்னார் வேதமூர்த்தி: ''ரொம்பவும் யோசனை பண்ணித்தான் செய்தேன். அவனும் அவளும் என் வீட்டிலே வந்து தங்கியிருக்கிறாங்க. அவங்களுக்குத் தாங்கள் இருவரும்

ஒரே ரத்தத்தின் வித்துக்கள் என்கிற விஷயம் தெரியாது. அதனால் அந்த இளம் உள்ளங்களின் உணர்ச்சிகள் எதனாச்சும் சந்தர்ப்பக் கோளாறினால் நெகடிவாகவும் பாசிடிவாகவும் மாறிப் போச்சுன்னா?.... அதுக்குப் பயந்து தான் அப்படிச் செய்தேன்.''

இதை முற்றிலும் ஆமோதிப்பவர் போல் மெல்லத் தலையாட்டிக்கொண்ட சேதுபதி, ''ஆனாலும் வேது! இந்த விஷயம் இவ்வளவோடு நிற்கட்டும். இதற்கு மேல் என் மகன் நரசுவுக்கு எதுவும் தெரிய வேணாம். உன் கால்களைப் பிடித்துக் கெஞ்சுகிறேன்; தயவு பண்ணி இந்த ஓர் இரகசியத்தைமட்டும் நீ கடைசிவரையில் காப்பாத்திடணும்'' என்றார் பரிதாபமாக.

இப்படி ஓர் இளகல் நிலைக்கு அவர் வரும்வரையில் காத்திருந்தவர் போல், ''உன்கிட்ட ஒரு யோசனையும் அநுமதியும் கேட்கணும் சேது!'' என்றார் வேதமூர்த்தி. ''இதற்கு நீ கொஞ்சம் நிதானிச்சு, சிந்தனை பண்ணிப் பதில் சொல்லணும்.''

''என்ன விஷயம் சொல்லு! எனக்கு நேரமாகுது. மணி ஒன்பது'' என்றவாறு தம் கைக் கடிகாரத்தைப் பார்த்தார் சேதுபதி.

''அதாவது பைப் பாரத் என்கிற ஒரு கம்பெனியில் நான் பாகஸ்தனாக இருக்கிறேன் என்பது உனக்குத் தெரியுமா?''

''கேள்விப்பட்டேன்.''

''யார் மூலமாக?''

''திருமலை என்று ஒரு பிள்ளையாண்டானைச் சொன்னேனே, அவன் வாயிலாக.''

''சரி; இப்போ உன் மகன் வேலை வெட்டி எதுவும் இல்லாமல் இருக்கிறான் என்பது தெரியுமா?''

''அதையும் கேள்விப்பட்டேன்.''

''இங்கே ஏதாச்சும் வேலை தேடிப் பார்க்கலாம்னுதான் வந்திருக்கிறான்.''

''........''

''ஆனால் அவனுக்கு நான் வேறொரு வழி செய்யலாம்னு நினைக்கிறேன்.''

''அப்படியா?''

''ஆமாம்; அந்தக் கம்பெனியில் எனக்கு இருக்கிற பங்குகளை அவன் பெயருக்கு மாற்றிக் கொடுத்து, அவனை அங்கேயே ஒரு பொறுப்பான பதவியில் உட்கார வைச்சுடணும்னு நினைக்கிறேன்.''

''இந்த நினைப்பின் அடியில் இருக்கிறதை நான் தெரிஞ்சுக்கலாமா?'' என்று கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டார் சேதுபதி.

''உண்மையைச் சொல்கிறேன்; நம்பிக்கையோடு கேட்பாயா?''

''இந்த உலகத்தில் நான் நம்புகிற ஒரே நபர் நீதான் வேது!''

நட்பின் உணர்ச்சிப் பெருக்கால் இருவரும் சில நிமிடங்கள் மௌனமாயிருந்தனர். பிறகு வேதமூர்த்தி சொன்னார்: ''என்னுடைய இன்னுயிர் நண்பனின் மகன் என்பதற்காகவே நான் இதை மனப்பூர்வமாகச் செய்ய நினைக்கிறேன். ஆனால்....''

''ஊம்!, அதையும் சொல்லிவிடு.''

''என் மனைவி இதற்கு வேறொரு பலனை எதிர்பார்க்கிறாள்.''

''நான் புரிஞ்சுக்கிட்டேன் வேது! உன் மனைவியின் விருப்பம் கைகூடினால் அதைவிட எனக்குச் சந்தோஷமான விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது. ஏன்னா, நானே ஒரு காலத்தில் இப்படி நடக்கணும்னு ஆசைப்பட்டிருக்கிறேன். ஆனாலும்...''

''என்ன தயங்கிறே?''

''தயக்கம் ஒண்ணுமில்லை; தெளிவாகவே சொல்கிறேன். நரசிம்மன் என் மகன் என்பதும், நான் அவனுடைய தகப்பன் என்பதும் உண்மைதான்; ஆனால் அவனது எதிர்கால வாழ்க்கையை நிர்ணயிக்கிற உரிமை எனக்குக் கிடையாது. அது இருக்கு





துன்னு நினைக்கிறது பைத்தியக்காரத் தனம்; அதை எடுத்துக்கொள்ள மூற் படறது அடிமுட்டாள்தனம். ஆகவே இந்த விஷயத்தில் என் அனுமதி யையோ விருப்பத்தையோ நீ எதிர் பார்க்க வேணும்.''

''சரி; எனது இரண்டாவது கேள் விக்கு உன் பதில்?''

''அதாவது உன் கம்பெனிப் பங்கு களை நரசுவின் பெயருக்கு மாற்றிக் கொடுக்கிறது பற்றியா?''

''ஆமாம்.''

''உன் மனைவியின் விருப்பம் நிறை வேறினால்தானே உனது இந்த நோக்க மும் நிறைவேற முடியும்?''

''என்னை நீ இன்னமும் சரியாகப் புரிஞ்சுக்கலே என்கிறது கிடக்கட்டும்; என்னை இவ்வளவு மட்டமா நினைக் கிறயே, அதுதான் எனக்கு வருத்தமா யிருக்குது சேது!'' என்றார் வேத மூர்த்தி உஷ்ணம் செறிந்த குரலில். ''என் மகள் மஞ்சுளாவை உன் மகன் நரசு மணந்தாலும் சரி, மணக்காவிட் டாலும் சரி; என் அருமை நண்பனின் மகனுக்கு நான் அந்த உதவியைச் செய் கிறது என்றே தீர்மானிச்சிருக்கிறேன். அதை உதவின்னுகூடச் சொல்ல எனக்கு விருப்பமில்லே. ஏன்னு, அவன் என் பங்குகளைச் சும்மா வாங்கிக்க விரும்ப லேன்னு, அந்த ஷேர்களின் தொகைக்கு ஓர் ஆண்டிமாண்ட் கடன் பத்திரம் எழுதி எனக்குக் கொடுத்து விடலாம்.''

சேதுபதி அவரைக் கண் இமைக்கா மல் பார்த்துக் கொண்டு பேசாதிருந் தார். ஏதேதோ சொல்ல எண்ணி, எதையும் கூற நாவெழாதவர் போல் ஒருவித உணர்ச்சிப் பிரமிப்புடன் உட் கார்ந்திருந்தார் அவர்.

இந்தச் சரியான சமயத்தில் ஒரு பெரிய தவற்றைச் செய்து விட்டார் வேதமூர்த்தி. ஆமாம்; அவர் இது காறும் பேசிய விஷயத்தை விட்டுவிட்டு, ''சேது! நீ ஏன் ஒரு காலை நொண்டி நொண்டி நடக்கிறே? அந்தக் காலுக்கு என்ன ஆச்சு?'' என்று பரிவுடன் வின வினார்.

சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்த சேதுபதி தம் இடக்கால் முட்டியைத் தடவிக் கொண்டே, ''ஓ... இதைக் கேட்கிறயா?'' என்றார் அலட்சிய மாக. மறு கணம் அவர் முகம் சினத் தால் சிவந்தது. ''இது ரெண்டு வரு ஷங்களுக்கு முன்னால் ஆந்திராவிலே இருந்தபோது ஏற்பட்ட ஒரு சின்னக் காயம்! நிலச்சுவான்தார் ஒருத்தனின் நெஞ்சைப் பிளக்கிறதுக்காகச் செய்த குண்டு அசந்தர்ப்பமாய் வெடிச்சு என் காலையே பதம் பார்த்து விட்டது; அவ்வளவுதான்!''



ரேகா




இதைக் கேட்டுப் பதறிப் போனார் வேதமூர்த்தி. சற்று நேரம் அவரால் மூச்சுக்கூடச் சரியாக விடமுடியவில்லை. எப்படியோ தம்மைச் சமாளித்துக் கொண்டு, ''சரி; உனக்கும் நேர மாகிறது!... நான் முன்னே கேட்டதற்கு என்ன சொல்லறே?'' என்றார் ஜீவனற்ற குரலில்.

''நீ என்ன கேட்டே வேது?''

''அந்தப் பைப் கம்பெனியிலுள்ள என்னுடைய பங்குகளை...''

சேதுபதி ஒரு இமிறலுடன் எழுந்து நின்றார். ''இந்த உன் யோசனையை நான் அறவே வெறுக்கிறேன்! ஏன்னு, என் மகன் ஒரு முதலாளியாகிறது எனக்குக் கட்டோடு பிடிக்கலே! அவன் உழைச்சுப் பிழைக்கட்டும்! உழைப்பாளியாக வாழட்டும்! அவனை முதலாளி வர்க்கத்தில் ஒருத்தனுக ஆக்கிடாதே! அப்படிச் செய்தால் அவனுடைய முதல் விரோதி நானுகத்தான் இருப்பேன்! அவனுக்கு என்னை எமனுக்கி விடாதே!'' என்றார் ஒரு பயங்கர உறுமலுடன். வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிவிட்டது!

வேதமூர்த்தி அவரைக் கனிவுடன் பார்த்து நகைத்தார். ''இப்படி உணர்ச்சி வசப்பட்டுப் பட்டுத்தான்உன் வாழ்க்கையைக் கெடுத்துக்கிட்டே சேது. இப்போ இந்த நாட்டையே கெடுக்க ஆரம்பிச்சுட்டே! இனி கடவுள்தான் உனக்கு நல்ல புத்தி கொடுக்கணும்'' என்று நைந்த குரலில் முணுமுணுத்தார் அவர்.

இதைக் காதில் வாங்கிக் கொள்ளாத சேதுபதி, ''சரி, புஷ்பககந்தியும் நானும் புறப்படலாமா?'' என்று கேட்டார்.

''புறப்படறதுக்கு முன்னால் ஒண்ணைச் சொல்றேன், கொஞ்சம் பொறுமையாகக் கேட்கிறயா?'' என்றவாறு, வேதமூர்த்தியும் எழுந்தார். ''உன்னுடைய உணர்ச்சிகளை என்னால் புரிஞ்சுக்க முடிகிறது சேது! அவற்றிலுள்ள நியாயங்களையும் நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அந்த நியாயங்களை நிலைநாட்ட நீ கடைப்பிடிக்கிற கொள்கை, செயல்படற விதம், சிந்திக்கிற வழி, அதிலே வைச்சிருக்கிற நம்பிக்கை அத்தனையும் அடியோடு தவறானவை; இந்த நாட்டுக்கும் இந்த நாட்டு மக்களுக்கும் தகாதவை என்றே எனக்குத் தோணுது. இதை ஏன் உனக்குச் சொல்றேன் தெரியுமா? இந்தக் கலிகாலத்தில் டனித வடிவாய் இம்மண்ணில் வந்து அவதரித்த காந்தி என்னும் ஒரு மகா வியக்தியின் நிழலை மட்டுமே தீண்டியவன் நான்; ஆனால் நீயோ அதன் புனித பாத கமலங்களையே தொட்டு ஸ்பரிசித்தவன். அப்படி ஒரு பேற்றைப் பெற்றவன் என்பதாலேயே தான் இதைச் சொல்கிறேன். அந்தக் காந்தி என்ற மகா சக்தியின் ஒளிக்கீற்று மறுபடியும் என்னிக்காவது ஒரு நாள் உன்னுடைய நல்ல நெஞ்சிலே பாயும்னு இன்னமும் நம்பறேன்.''

தம்மை யறியாமல் தம் கண்களில் வழிந்த நீரை அவசரமாகத் துடைத்துக் கொண்டவர், ''சரி; வா, போவோம்'' என்று இளநகையுடன் கூறியவாறு சேதுபதியின் தோளில் கையைப் போட்டு அழைத்துச் சென்றார்.

மறுநாள் காலை பத்து மணி வாக்கில் வேதமூர்த்தியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான் நரசு. எப்போதும் அமைதியே நிலவக் கூடிய அந்த வீடு இன்று வழக்கத்தைவிட அதிக அமைதியில் ஆழ்ந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

ஷெட்டில் கார் இல்லாததால் வேதமூர்த்தி வெளியே சென்றிருக்கிறார் என்பதை ஊகித்துக் கொண்டான். அரை மணி நேரத்துக்கு மேல் ஆகியும் மஞ்சுகரி அவனைப் பார்க்க வராததால் அவளும் வீட்டில் இல்லை என்பது புலனாயிற்று. ஆனால் புஷ்பககந்தி? அவளுடைய நடமாட்டத்தைக்கூடக் காண முடியவில்லையே என்று உள்ளூற எண்ணி வியந்தவனாய்த் தன் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்த அவனது நினைவில், நேற்று விஜயரங்கன் சொன்ன



சென்னை, ஹோட்டல் ஸ்ரீலேகா மானேஜிங் டைரக்டர் திரு எம். பி. நாராயணன் அவர்களின் புதல்வி சௌபாக்யவதி சேதுகுமாரி, பி.எஸ்.ஸிக்கும், பாண்டிச்சேரி பொதுப்பணித்துறை உதவி இன்ஜினியர் திரு சுதர்சனன், பி.ஈ.க்கும் திருமணம் ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் செப்டம்பர் 14ந் தேதி வெகு விமரிசையாக நடைபெற்றது. மணமகன் திரு ஆதிசேஷ நாயக்கர் அவர்களது புதல்வர். திருமண முகூர்த்தத்துக்கும் வரவேற்பு வைபவத்துக்கும் நகரின் முக்கிய பிரமுகர்களோடு தமிழக முதல்வர் திரு மு. கருணாநிதி, அமைச்சர்கள் திரு நெடுஞ்செழியன், திரு கே. ராஜாராம்; அவைத்தலைவர் திரு சி. பி. சிற்றரசு, திரு இராம அரங்கண்ணல், எம்.எல்.ஏ. நகர மேயர் திரு ஆறுமுகம், போலீஸ் கமிஷனர் திரு கே. ஆர். ஷெனாய், நகரசபை கமிஷனர், பிரதம என்ஜினியர் மற்றும் பல உத்தியோகஸ்தர்களும் ஆதரவாளர்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்!



ஸோலோ காதல் மலர்ச்சி...
காதல் விளையாட்டில் களிப்பெய்திட...!
SOLO
ஸோலோ
உங்கள் இளமையின் துடிப்பு,
காதல். உங்கள் காதலுடன்
கொஞ்சிக் குலவி அள்ளி அருந்தி,
உள்ளம் மகிழ்ந்திட...
ஸோலோ
துடிப்புள்ள எலுமிச்சை பானம்!
ஸோலோ காதல் பானம்... இளம் உள்ளங்கள் கீதம்!

அந்தச் சேதி ஓர் அர்த்தபுஷ்டியுடன் நிமிர்ந்து எழுந்தது.

ஆம்; விஜயரங்கன் மாயூரத்திலிருந்து சென்னைக்குப் புறப்படு முன்னால் நரசுவின் தாயாரைப் போய்ப் பார்த்தானும். அங்கே பாக்கியத்தம்மாள் இல்லாததைக் கண்டு அவனே அவளைப் பற்றி விசாரித்தானும். அந்த அம்மாள் தான் வளர்ந்த கன்னிகா மடத்தில் திரும்பவும் சேர விரும்புவதாகச் சொல்லிக் கிளம்பிப் போய் விட்டாள் என்று மதுரத்தம்மாள் சொன்னாளாம். ஆனால் இவ்விவரத்தைத் தன் மைந்தனிடம் தெரிவிக்க வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டாளாம்.

அப்படிக் கேட்டுக் கொண்டும் அதைத் தன் நண்பனிடம் சொல்லாமல் இருக்க முடியாமல் சொல்லி விட்டான் விஜயரங்கன்.

அந்த விஷயத்தைக் கேட்டதிலிருந்து நரசுவின் மனம் வெகுவாகக் குழம்பிக் கலங்கிப் போயிற்று. தன் தாயார் பேச்சுத் துணைக்குக்கூட யாருமின்றித் தனிமையில் கிடந்து சிரமப்படுவாளே என்ற கவலை அவனை வாட்டத் தொடங்கிற்று. ஆனால் பாக்கியத்தம்மாள் வீட்டை விட்டுப் போய்விட்ட விவரத்தைத் தன்னிடம் தெரிவிக்க வேண்டாம் என்று அவள் சொன்னதுதான் அவனுக்கு வியப்பாயிருந்தது.

'அந்த விவரம் தெரிந்தால் வேலை தேடும் முயற்சியைக் கைவிட்டு உடனே ஊருக்கு வந்துவிடுவேன் என்று எண்ணி, அப்படி வர வேண்டிய அவசியமில்லை என்பதற்காகவும், இங்கே நான் உத்தியோகம் தேடிப் பார்ப்பதே முக்கியம் என்பதற்காகவும் அதனை என்னிடம் தெரிவிக்க வேண்டாம் என்று சொல்லியிருப்பாளோ ?'

இந்த ஊகம் சரியாயிருக்கும் என்றே அவனுக்குத் தோன்றியது. ஆனால் பாக்கியத்தம்மாள் வீட்டை விட்டுப் போவதற்குத் தன் தாயாரிடம் சொன்ன காரணம் முழுக்கப் பொய்யானது என்பதை மட்டும் அவன் அப்போதே தீர்மானித்து விட்டான். கன்னிகா மடத்திலிருந்து வேதமூர்த்தியால் அழைத்து வரப்பட்டிருக்கும் தன் மகளைப் பார்க்கத்தான் அவள் சென்னைக்குக் கிளம்பி வந்திருக்கிறாள் என்பது அவனுக்கு நிச்சயமாகி விட்டது. ஆயினும் நேற்று காலை வரையில் அவள் வேதமூர்த்தியின் வீட்டுக்கு வரவில்லையே ? வேறு எங்கு போய் இருப்பாள்? எங்கே தங்கியிருப்பாள்? ஒருகால் நேற்றுகாலை முதல் இன்று காலை வரை அவன் இல்லாத போது இங்கு வந்து தன் மகளைப் பார்த்துவிட்டுப் போயிருப்பாளோ ? —



''இந்தக் கடிகாரத்தை ராமசாமியிடம் நான் திருடியது உண்மை. ஆனால், அதை ரிப்பேர் செய்த செலவு ரூ. 12ஐ மட்டும் எனக்குத் திருப்பித் தரச் சொல்லுங்க சார் !''

சங்குப் பாட்டி வந்து அவனைச் சாப்பிட அழைத்துவிட்டுப் போனாள். முகம் கை கால்களைச் சுத்தி செய்து கொண்டு சாப்பாட்டு அறைக்குச் சென்றான் நரசு.

கௌரியம்மாள் அப்போது தான் படுக்கையிலிருந்து எழுந்து வந்தாள். நேற்றைக்கு இன்று அவள் மிகவும் பலவீனமாகக் காணப்பட்டாள். முகத்தில் ஏதோ துயரம் கவிந்திருந்தது. ஆனாலும் தன் வழக்கமான கனிவுப் புன்னகையுடன் அவனை வரவேற்று இலைக்கு எதிரில் உட்கார வைத்துவிட்டுத் தானும் பக்கத்தில் அமர்ந்தாள். சங்குப் பாட்டி உணவு பரிமாறினாள்.

தன் கணவர் கம்பெனிக்கும், மனோகரி காந்தி சமாஜத்துக்கும் போய் இருப்பதாகவும், அவர்கள் இப்போது வருகிற நேரம்தான் என்றும் சொன்னாள் கௌரியம்மாள். அவனுடைய கண்ணில் இன்னமும் புஷ்பசுகந்தி தென்படவில்லை. அதனால் அவன் சாப்பிட்டுக் கொண்டே தன் பார்வையை அங்குமிங்குமாகச் செலுத்திக் கொண்டிருந்தான். கடைசியில் கௌரியம்மாளைப் பார்த்து, ''எங்கேம்மா அந்தப் புஷ்பசுகந்தி?'' என்று புன்னகையுடன் கேட்டான்.

**''அவளா தம்பி? நேத்திக்கு அவளுடைய அம்மாக்காரி வந்து அவளை அழைச்சுக்கிட்டுப் போயிட்டாள்'' என்று சாதாரணமாகச் சொன்னாள் கௌரியம்மாள்.**

**அதிர்ச்சியுற்றவன் போல் நிமிர்ந்த நரசு, ''அப்படியா ?'' என்றான் உள்ளடங்கிய குரலில். ''அடடா ! அந்தப் பெண் போகும்போது நான் இங்கே இல்லாமல் போய் விட்டேனே ! ரொம்பவும் நல்ல பெண்!'' என்று கூறிக் கொண்டே எழுந்து சென்று கூடாத்தில்**

கை வாய் கழுவிக் கொண்டு திரும்பினான். ''அம்மா! அந்தப் பெண்ணுக்குத் தாய் தகப்பன் யாருமில்லே, கன்னிகா மடத்தில் அநாதையாக வளர்ந்தவள்னு உங்க மகள் என் கிட்டே சொன்னதே?'' என்று தன்னை மீறிய துணிச்சலுடன் கேட்டு விட்டான்.

கௌரியம்மாள் உள்ளூறச் சிரித்துக் கொண்டாள். 'பாக்கியத்தம்மாளின் கடிதத்தை இவன் படித்திருந்தும் அதைக் காட்டிக் கொள்ளாமல் எவ்வளவு சாமர்த்தியமாகக் கேள்வி கேட்கிறான்' என்று எண்ணியே அவ்வாறு சிரித்தாள். ''என்னமோ தம்பி, நாங்களும் முதலில் அப்படித்தான் நினைச்சோம். அப்புறம் அந்தக் கன்னிகா மடத்துக்காரங்களே அவளுடைய தாயார்க்காரியை இங்கே அனுப்பி வைச்சுட்டாங்க.''

''அந்தப் பெண்ணின் தாயாருக்கு இந்த ஊர்தானா? அல்லது வெளியூரா?''

''அது எனக்குத் தெரியலே தம்பி! ஐயாவுக்குத்தான் விவரம் தெரியும்.''

தன்னுடைய ஊகம் 'சரியாகவே' ஆகிவிட்டது என்று அவன் எண்ணினான். அதாவது, பாக்கியத்தம்மாளே இவ்வீட்டுக்கு வந்து தன் மகளை அழைத்துக் கொண்டு போய்விட்டாள் என்று அவன் ஊகித்தான்! தாயும் மகளும் இப்போது எங்கே தங்கியிருப்பார்கள்? இந்தத் தகவலை அவள் நிச்சயமாக இவ்வீட்டாரிடம் தெரிவித்திருக்கமாட்டாள் என்றும், அதனால் இதுபற்றி அவர்களிடம் விசாரிப்பது வியர்த்தமே என்றும் அவனுக்குத் தோன்றியது.

பலவும் சிந்தித்துச் சிந்தித்துக் களைப்படைந்து போன அவன் அறைக்கு வந்து சற்று நேரம் படுத்துக் கண்ணயர்ந்து விட்டு எழுந்து தன் நண்பன் விஜயரங்கனைப் பார்க்கக் கிளம்பி விட்டான்.

அவன் வெளியே போன சற்றைக்கெல்லாம் வேதமூர்த்தி வந்து சேர்ந்தார். மனோகரி ஏற்கனவே வந்துவிட்டிருந்தாள்.

தம் மனைவியின் அறைக்குள் பிரவேசித்த வேதமூர்த்தி கேட்டார்: ''என்ன, உன் மனக் கோட்டையை அந்தரத்தில் நிற்க வைச்சுட்டுக் கீழே இறங்கி வந்துவிட்டாயா? இல்லே, இன்னமும் அதிலேதான் சஞ்சரிச்சுக்கிட்டு இருக்கிறாயா?''

கௌரியம்மாள் பதில் ஏதும் பேசவில்லை.

''எதைப் பற்றி யோசனை?'' என்று மீண்டும் கேட்டார் வேதமூர்த்தி.

''ஒண்ணுமில்லே ......'' என்று பேச்சை ஆரம்பித்தாள் கௌரியம்மாள். ''அப்புறம் நீங்க என்னதான் செய்யறதாக உத்தேசம்?''

''அதுபற்றி நேற்றிரவே உன் கிட்டே சொல்லி விட்டேனே கௌரி!''

''சொன்னீங்க. ஆனால்....''

''நீ எதனுச்சும் புதுசா யோசனை பண்ணியிருக்கிறாயா?''

''புதுசா ஒண்ணுமில்லே. நேத்திக்கு அந்த மனிதர், தமக்குத் தம் பிள்ளையின் விஷயத்தில் தலையிட உரிமையில்லேன்னு சொன்னதாலே, நாம் முதலில் நினைத்தபடியே செய்தால் என்னன்னு நினைக்கிறேன்.''

''கூடவே கூடாது! சேதுபதியின் போக்கையெல்லாம் பார்த்தால் ரொம்பவும் பயங்கரமாயிருக்குது. அவர் எதற்கும் துணிஞ்சவரா யிருக்கிறார். அதனால் இந்தப் பிள்ளையாண்டானை நம் கம்பெனியின் பாகஸ்தனாக்கி எதனுச்சும் ஒரு பதவியில் உட்கார வைச்சால் அது அவனுக்கே பின்னால் அனர்த்தமானாலும் ஆகிவிடும். தமது விருப்பத்தை மீறி நாம் காரியம் செய்திருக்கிறோம் என்ற ஆத்திரத்தில் அந்த மனிதர் தாம் பெற்ற பிள்ளையென்றும் பார்க்காமல் தகாத காரியம் செய்து விட்டால் பிறகு காலமெல்லாம் நம் மீது பழி சுமந்து விடுமே! அப்படியும் நடக்கும் என்கிறதுக்கு அறிகுறியாக இன்னிக்கே ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். அதை அப்புறம் சொல்றேன்.''

சற்று நேரம் மௌனமாயிருந்த கௌரியம்மாள், ''சரி; நம்முடைய இந்த முதல் திட்டத்தை வேணுமானால் கைவிட்டு விடலாம். இரண்டாவது திட்டம்....? அதுக்கு இந்தப் பிள்ளையாண்டானின் தாயாரை இங்கே வரவழைக்கக் கேட்டுப் பார்க்கலாமே?'' என்றாள்.

''கேட்கலாம். ஆனால் இதையும் இப்போ உடனடியாகச் செய்ய வேணும்னு தோணுது. ஆறு மாசம், அல்லது ஒரு வருஷத்துக்கு அப்புறம் இது பற்றி யோசிக்கலாம்.''

''எதற்கு அவ்வளவு நாள் தள்ளிப் போடறது?''

''இந்த விஷயத்தில் நம் மனோவின் விருப்பம் என்ன என்கிறதை நாம் தெரிஞ்சுக்க வேணுமா? அத்துடன் அந்தப் பிள்ளையாண்டானின் மனசையும் ஆராயவேணும்.''

இதை மறுத்துப் பேசத் தோன்றாமல் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்த கௌரியம்மாள், ''ஆமாம்; என்னமோ பிறகு சொல்றேன்னு சொன்னீங்களே, அது என்ன?'' என்று கேட்டாள்.

வேதமூர்த்தியின் முகம் திடீரென்று ஒருவிதத் திகிலால் வெளுத்துச் சிறுத்தது.

(தொடரும்)

# தண்டாயுதபாணி

ஆறுவித வடிவிலவன்
அருள் ஞானப் பொய்கை யதில்
அவதாரம் செய்த விதமும்

ஊறுவிளை சூர னுடல்
ஏறுமயில், சேவலென
அணியாரம் செய்த வதமும்

ஆறுபடை வீடு களை
அடுத்திருக்கும் மறு வீடு
ஏழாம் படைவீடு எனவும்

பேறுபட வைத்து வினை
ஆறுதலைத் தந்து உனை
ஆலயமாய்க் கொண்டு தினமுய

உன்னிடத்தில் வாஞ்சை யுடன்
உலவுகின்ற நேர மிது
உனக்கென்ன வேண்டும், மனமே!

— கி. பாலதண்டபாணி



# வழியுண்டோ?

மலையில் பிறந்த கல்லெடுத்து
மனதில் உணர்வின் உருசமைத்து
கலையைச் சிலையில் வடித்தளிக்கும்
கண்ணிய மிக்க சிற்பியரே!
நிலையில் இரிந்து தடுமாறி
நிறையும் குறையும் கொண்டுதினம்
அலையும் மாந்தர் இதயத்தை
அழகாய்ச் செதுக்கிட வழியுண்டா?

மண்ணில் விளையும் பொன்னெடுத்து
மாசை யகற்றிப் புடம்போட்டு
வண்ணம் சேரும் அணிகலனை
வடித்துக் கொடுக்கும் கலைஞர்களே!
கண்ணை மூடிக் கொடுமைகளைக்
கணக்கு களின்றிச் செய்துவரும்
எண்ணற் கரிய மாந்தர்களின்
இதயம் புடமிட வழியுண்டா?

காட்டைத் திருத்திக் கழநிகளை
காய்கறித் தோட்டம் சோலைகளை
வாட்டம் போக்கிட விளைவிக்கும்
வள்ளல் எங்கள் உழவர்களே!
ஏட்டைக் கற்றும் எதுகற்றும்
என்றும் களையை இதயத்தில்
நாட்டங் கொண்டே வளரவிடும்
நஞ்சினைக் களைய வழியுண்டா?

செடியில் விளையும் பருத்தியினைச்
சீராய்ச் சேர்த்து நூலாக்கி
நெ டியில் ஆடை நெய்துதரும்
நேசம் மிக்க நண்பர்களே!
வடியும் கண்ணீர் ஆற்றினிலே
வாழும் முதலைக் கூட்டத்தை
நொடியில் பிடிக்கும் வலையின்றி
நோவைப் போக்கிட வழியுண்டா?

மேடை போட்டு அலங்கார
மேளம் முழங்கப் பவனிவந்து
கோடை யிடியாய் முழங்கிவரும்
கோதறு சொல்லின் செல்வர்களே!
ஆடை யின்றிக் கூழின்றி
ஆவியை வாட்டும் வறுமைக்குப்
பாடை கட்டிட ஏதேனும்
பயனுர் முறையில் வழியுண்டா?

உண்டு என்றால் சொல்லுங்கள்
உண்மை வழியில் நில்லுங்கள்!
கண்டு உய்வோம் புதியதொரு
களங்கம் இல்லாச் சமுதாயம்!
பண்டு சொன்ன பாட்டிகதைப்
பருப்பு இனிமேல் வேகாது!
ஒன்று பட்டு உழைத்தாலே
ஊரும் நாடும் உயர்வாகும்!

— திருவை. எம். ஏ. ரஹ்மான்





# ஆஷா! உன் முடிவு என்ன

எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம்

கடை வாசலிலிருந்து படி இறங்கி வந்தாள் மகேசுவரி. மாலையின் ஒளி மயக்கத்தில் கால் விரல்கள் படியில் தடுக்கி விழப் போனாள். சட்டென்று இரு கரங்கள் அவளைத் தாங்கிக் கொண்டன.

''பார்த்து மெதுவாக இறங்குங்கள், அம்மா.''

கடும் வெய்யில் நேரத்தில் தாகத்துக்குக் கிடைக்கும் குளிர்ந்த மோரைப் போல் அந்தச் சொற்களின் மிருதுவும், குரலின் நயமும் அவள் மனத்துக்கு இதமாக இருந்தன. அவளைத் தாங்கிய அந்தப் பெண் தனது பிடியை விடவில்லை. மெல்ல அழைத்துக் கொண்டு போய்க் காரில் ஏற்றி விட்டாள்.

''உன் பெயர் என்ன அம்மா?''

''ஆஷா.''

''உன்னை... உன்னை... எங்கேயோ பார்த்த ஞாபகம். நினைவுக்கு வரவில்லை'' என்று நெற்றியைத் தடவி விட்டுக் கொண்டாள். பவுன் விளைய மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். கீழுதடு பிதுங்கிற்று.

''ஊஹூம். ஞாபகத்துக்கு வரவில்லை. வயதாகி விட்டது.''

''நான் சொல்லட்டுமா?'' கூடவே குன்றி மணி இறைத்தாற்போல் அவளுடைய சிரிப்பு எழுந்தது.

''சொல்லு.''

''நேற்று நான் ஹென்சந்த் பிரதர்ஸ் காரியாலயத்துக்கு வந்திருந்தேன். 'ஸ்டெனோ' வேலைக்காக இண்டர்வ்யூ. மானேஜிங் டைரக்டர் என்னிடம் பேசிக் கொண்டிருந்தபோது நீங்கள் உள்ளே வந்தீர்கள். நான் எழுந்து வெளியே போய்விட்டேன்!''

''பெரிய மானேஜிங் டைரக்டர்! என் மகன் தானே அவன்? வேலைகிடைத்ததோ உனக்கு?''

உதட்டைப் பிதுக்கிக் கொண்டாள். முகம் அனலில் பட்ட பூவாய் வாடிற்று. ''கிடைக்கவில்லையே அம்மா? அவருக்குப்பிடிக்கவில்லை.''

''ஏன்? உனக்கு என்ன குறைச்சல்?''

''அவருக்கு 'ஸ்டெனோ' ஒரு வாலிபனாக இருந்தால் தேவலை என்று தோன்றுகிறது.''

''ஓ. இப்படித்தான் எதற்கும் பிடிவாதம்! நாளைக்கு என்னை எதற்கும் வீட்டில் வந்து பார்'' என்று தன் விலாசத்தைக் கொடுத்தாள் மகேசுவரி.

மறுநாள் அவள் சந்திப்பதற்குள் பெயர் மறந்து விட்டது. ஆனால் முகம் ஞாபகம் இருந்தது. வயது மிகுந்து மஞ்சள் கனிந்து விட்ட முகம். கடல் நடுவே பாறையைப் போலப் பார்வையில் ஒரு கம்பீரம். அந்த வீட்டின் பொறுப்பைத் தனியாகத் தாங்கும் களைப்பில் தளர்ந்து விட்ட உடல்.

''நான் சொல்லிவிட்டேன். நாளைக்கு நீ வேலைக்குப் போகலாம். அப்புறம் உன் சாமர்த்தியம். பிடிவாதக்காரன். சுருக் சுருக் கென்று அவனுக்குக் கோபம் வரும். ஆனால் வந்த வேகத்தில் தணிந்து போகும். இவ்வளவும் நான் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது.'' நெஞ்சு நெகிழ்ந்த விதம் குரலில் பரிவாய்த் தெரிந்தது.

ஆஷாவை ஒருமுறை நிமிர்ந்து பார்த்தாள் மகேசுவரி. அபூர்வமான அழகு என்று சொல்ல முடியாது. தனியான கவர்ச்சி எதுவும் இல்லை. சுமாரான உயரம்தான். ஆனால் அந்தக் குழந்தைச் சிரிப்பில் ஓர் அழகு சுடர் ஆடிற்று. பழகும் விதத்திலும் பணிவான பேச்சிலும் மனத்தை வசீகரிக்கும் நயம் தெரிந்தது. அந்தச் சாதாரணப் புடவையும், அவள் அணிந்திருந்த விதத்தில் மெருகு நலுங்குவது போலத் தோன்றியது.

ஆஷா பார்வையில் உவகை துள்ள எழுந்து நின்றாள். அஞ்சலியில் குவிந்த கைகளுடன் புறப்பட்டாள். கருணை ததும்பும் அந்தத் தாயாரின் பார்வை கூடவே வாசல்வரையில் அவளைத் தொடர்ந்து போயிற்று.

கிஷன்சந்த் ஒரு கறுகறுப்பான வாலிபன். அந்த இளம் வயதில் சிக்கல் நிறைந்த அவனுடைய வேலையை அவன் எளிதாகச் சமாளித்துக் கொண்டிருந்தான். போனை எடுப்பது, கடிதத்தை எடுத்துச் சொல்வது, கண்டிப்பு நழுவாமல் நிதானமாக வியாபாரத்தை முடிப்பது எல்லாவற்றிலும் ஒரு பழுத்த அனுபவம் வாய்ந்தவரின் தோற்றம் தெரிந்தது. அவனுடைய தந்தையின் பிரதிநிதியாக இருக்கலாம். ஆனால் அவனுக்கு வயது முப்பதுக்கு மேல் இராது.

எதையும் தப்பில்லாமல் செய்ய வேண்டும். கொஞ்சம் பிசகினாலும் முகம் சிவந்துவிடும். வேலையில் புதிதாகச் சேர்ந்தது ஒருபுறம். அவனுடைய கண்டிப்பைக் கண்டு ஏற்படும் பயம் இன்னொருபுறம். தணல் விசிறினாற் போல அவன் ஏதாவது சொல்லி விடுவான். அவளுடைய கண்கள் கலங்கிப் போகும்.

''இதற்குத்தான் ஒரு வாலிபன் தேவை என்று சொன்னேன்'' — சமயம் நேர்ந்த போதெல்லாம் குத்திக் காட்டுவது போல் அவன் இதைச் சொல்லுவான். அவளுடைய மனம் வேதனையில் துவளும். ஆனால் கொஞ்ச நேரத்திலேயே அவளுடைய திறமையைப் பாராட்டும் விதமாக ஒரு சொல் அவனிடமிருந்து வரும். மருண்ட குழந்தைப் பார்வை மறைந்து அவள் முகம் நாணத்தில் சிவக்கும்.

வேலையின் தொடர்பு மட்டுமின்றி அவள் மனம் அவன் அன்புக்காகவும் காத்து நிற்கும். வெறும் 'ஸ்டெனோ'வாகப் பார்க்காமல், அவளை ஒரு பெண்ணாக அவன் கவனிக்க மாட்டானா என்ற ஏக்கம். அவன் பாராட்டுதலில் நெஞ்சு கரைந்து நினைவின் கரையோரம் ஒதுங்கும் உணர்ச்சியில் அந்த ஆவலும் கண் சிமிட்டும். ஆனால் அவனிடம் அந்த மென்மையான உணர்வை அவள் எதிர்பார்த்து என்ன பயன்?

தென்றலில் பூ அசைவது போல் நடந்து வருவாள் நித்யா. எந்த விதமாகக் கவனித்தாலும் அழகின் ஒளியாட்டம் குலுங்கும் தோற்றம். உடையின் பிடிப்பு கொள்ளாமல் பொங்கும் இளமை. பேச்சிலும் பார்வையிலும் தூண்டிலாக இழுக்கும் துள்ளல். பத்திரிகைகளில் அந்த அழகுருவத்தைக் கவனித்திருக்கிறாள் ஆஷா. அவள் ஒரு விளம்பர மாடல். கல்லூரிப் பெண், இளம் தாய், காதல் மணம் கமழும் கன்னி—இப்படி ஒவ்வொரு தோற்றத்திலும் அதற்கேற்ற பொருத்தத்துடன் நிற்பாள். எந்த உடையும் அவளுக்கு ஏற்றதாகத்தான் இருக்கும்.

அவள் உள்ளே வந்தாலே கிஷன்சந்த் மாறி விடுவான். பார்வை இளகிவிடும். குரல் பணிந்து போகும். அவனுடைய கண்டிப்புத் தளர்ந்து விடும். நெஞ்சில் உள்ளெழுந்த அலைகளில் பார்வை தடுமாறும். நித்யா அவனிடம் அலட்சியமாகத்தான் பழகுவாள். தூங்கும் பம்பரத்தை விளையாட்டுப் பையன் கையில் எடுப்பதைப் போல் அவனை லாகவமாகத் தன் இஷ்டப்படி நடத்துவாள். அவள் விருப்பத்துக்கு மாறாக எதுவும் செய்ய மாட்டான் கிஷன்சந்த்.

அந்தக் கள்ளப் பார்வையும், குரலின் கவர்ச்சியும் அவனுக்குக் கைவர முடியாது. அவள் வந்து போனால் மத்தாப்பின் ஜ்வலிப்பாக இருக்கும். அந்த ஒளிக் கோலத்தில் கிஷன்சந்தின் கண்கள் சொக்கி நின்றுவிடும். குத்துவிளக்கின் மௌனச் சுடராக அழகிடும் ஆஷா இருக்கும் இடமே அவன் பார்வைக்குத் தெரியாது.

யோசனையாகத் தன் நினைவுகள் தன்னைச் சுற்றிச் சூழ உட்கார்ந்து கொண்டிருந்தாள் ஆஷா. கிஷன்சந்த் நித்யாவுடன் வெளியே போய்விட்டான்.

''ஹலோ! நீங்கள்தாம் அம்மா அடிக்கடி சொல்லும் 'ஸ்டெனோ'வா?''

ஆண்குரல் கேட்டுத் திரும்பினாள். கிஷன்சந்தின் சாயல். ஆனால் அத்தனை அழகில்லை. அதே குரல். ஆனால் அதைவிட நயம் நிறைந்த குழைமையான குரல். அவனுக்கு இப்படி ஒரு தம்பி உண்டா?

''ஏன் பதில் இல்லை?'' அவன் புருவங்கள் வினவில் உயர்ந்து நெரிந்தன. கரடி மயிர்ப் புருவங்கள். கண் சிரித்தது.

''ஆமாம், ஸார். நான்தான். உங்களுக்கு என்ன வேண்டும்?''

''அம்மா இங்கே வந்தார்களா? அண்ணன் எங்கே? உள்ளே இல்லையே?''

''வெளியே போயிருக்கிறார்.'' அவள் குரல் கம்மிற்று. இந்நேரம் அவன் நித்யாவின் பிடியில் இருப்பான். நெஞ்சில் கனியும் பொருமை. அதன் நிழல் முகத்திலும் தலை காட்டிற்று. ஒரு சிரிப்பில் உணர்ச்சியை மழுப்பி மறைத்துக் கொண்டாள்.



''புதிதாக வந்து சேர்ந்திருக்கிறீர்களா? இரண்டு மாதங்களாக நான் ஊரில் இல்லை. அதனால்தான் நான் உங்களைச் சந்திக்கவில்லை. என் பெயர் ராம்சந்த். உங்கள் எம். டி.யின் தம்பி. ஓர் இன்ஜினீயர். அம்மா இங்கு வருவதாகச் சொன்னாள். அழைத்துக்கொண்டு போகலாமென்று வந்தேன்.''

''இதோ நான் வந்தாயிற்று'' என்று குரல் உள்ளே வந்தது. மகேசுவரி தேவி இருவரையும் மாறி மாறிப் பார்த்தபடியே உள்ளே வந்தாள்.

''எங்கே ஷென்சந்த்?''

''வெளியே போயிருக்கிறார் அம்மா.''

அவள் புரிந்துகொண்டுவிட்டாள். ''நித்யா வந்திருந்தாளாக்கும்?'' அந்தக் குரலில் ஏனோ ஒரு பரிதாபம் தொனித்தது. ஒரு பெருமூச்சுடன் மகனின் புறம் திரும்பினாள்.

''சரி, வா. நாம் போகலாம்.''

''குட்பை...'' என்று திரும்பினான் ராம்சந்த்.

''குட்பை ஸார்.'' அவள் அவன் இளகிய பார்வையை, அது தந்த ஆறுதலை அப்புறம் கொஞ்ச நேரம் நினைத்துக் கொண்டேயிருந்தாள். பாலையில் பூத்த பூப்போல அந்த எண்ணத்தின் பசுமையில் நெஞ்சு கசிந்தது.

ஒரு மாதம் ஆகிவிட்டது.

அடிக்கடி வந்து போவான் ராம்சந்த். அவளிடம் நின்று இரண்டு வார்த்தைகள் பேசாமற்போனால் அவனுக்குத் திருப்தியாக இராது. அவள் 'உம்'மென்று இருந்தால் விளையாட்டாக ஒரு தலைவலி மாத்திரையை மேஜைமீது வைத்துவிட்டுப் போவான். 'கலகல'வென்று சிரித்தபடி பேசி அனுப்பினால், 'இந்தா' என்று ஒரு சாக்லேட்டை அவள் முன்னால் நழுவவிடுவான்.

அன்று ஷென்சந்துக்குப் பிறந்த நாள்.

முதல் நாளே அதை அவன் அவளிடம் சொல்லியிருந்தான். அழகான சிறு மலர்க்கொத்து ஒன்றைக் கொண்டு வந்து புன்னகையின் மலர்ச்சி மாறாமல் அவன் மேஜையின் மீது வைத்தாள் ஆஷா. அவன் முகத்தில் சிறு இளக்கம்கூட இல்லை. அவள் ஆசையாகக்காட்டிய கனிவை எளிதாக ஏற்கும் அலட்சியம்.

அவள் நெஞ்சின் ஊஞ்சல் சிறு முனகலுடன் ஆடிற்று.

''இது உனக்கு என் பரிசு.'' தங்க மூடி போட்ட பேனா.

''தாங்க்யூ ஸார்.''

''இன்று 'லஞ்ச'க்கு நீ என்னுடன் வரலாம். எதற்கும் ஒரு மணிக்கு நான் உனக்கு மறுபடியும் சொல்கிறேன்.''

தன் இடத்தில் போய் உட்கார்ந்தாள் ஆஷா. கையில் இருந்த அந்தப் பேனாவைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அதன் மெருகு அவள் நெஞ்சில் மின்னல் ஒளி எழுப்பிற்று. மென்மையான மணி ஓசை ஒன்று உள்ளே கிணுகிணுவென்று அவள் மேல் இறங்கிற்று.

''குட்மார்னிங் மிஸ் ஆஷா.''

தலையைப் பணிவாக அசைத்தபடி அவளைக் கடந்து போனான் ராம்சந்த். ஒரு நிமிடம்கூடக் கடந்திராது. நிமிர்ந்த தலையும் இடுப்பை அசைத்து ஒடித்த நடையுமாக மிடுக்குடன் உள்ளே போனாள் நித்யா,

சட்டென்று அவள் மனம் இருண்டது. காலையில்தான் அவள் மனம் பொன்னாய் இருந்தது. அதில் ததும்பிய ஒளியில் கண் கூசின விதத்தில், அவள் ராம்சந்த் வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை. இப்பொழுது மெதுவாகக் கவிழ்ந்து கூடிச் சேர்ந்துவிட்ட இருள்.

நித்யாவுடன் சிரித்தபடி கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான் ஷென்சந்த். அவள் புறம் திரும்பக்கூட இல்லை அவன் பார்வை. இருவரும் அவளைக் கடந்து போய் விட்டார்கள். நெஞ்சில் ஏதோ பெருகி அடைத்துக் கொண்டது.

தில்லியின் வெப்பத்தில், அனல் காற்றில் புழுங்கிய கோடை நாட்கள். மழை பொழிந்து சாலையில் கணுக்காலை அலைக்கத் தண்ணீர் தேங்கி நிறையும் மழை நாட்கள். நெஞ்சைச் சில்லெனக் கவ்வும் தண்மையான காற்று வீசும் குளிர் நாட்கள். ஆறு மாதங்கள்.

இந்தரை மணிக்கு இருட்டத் தொடங்கிவிட்டது. பஸ்ஸு‌க்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள் ஆஷா. கழுத்தும் கூந்தலும் மறையக் கட்டிய அழகான 'ஸ்கார்ப்'. முழங்கால் வரை தொங்கிய, உடலைத் தழுவினாற்போல்



## பார்வை மங்கியவர்கள் படிக்க....

வயதானதால் பார்வை மங்கியவர்கள், பத்திரிகைகள், புத்தகங்களைப் படிக்க முடியாமல் சிரமப்படுகிறார்கள். "கொஞ்சம் பெரிய எழுத்துக்களில் அச்சிடக் கூடாதோ?" என்று அலுத்துக் கொள்வார்கள்.

இத்தகையவர்களுக்கு வசதியாக "ஆப்டிஸ்கோப் என்லார்ஜர்" என்ற கருவியை அமெரிக்க நிறுவனம் ஒன்று தயாரித்திருக்கிறது. புத்தகங்கள், இதழ்கள், பத்திரிகைகள் ஆகியவற்றின் வரிகளை இது ஒரு திரையில் பெரிதாக்கிக் காட்டுகிறது. நாம் விரும்பும் இடத்துக்கு எடுத்துச் செல்லக்கூடிய வகையில் இது அளவில் அடக்கமாக இருக்கிறது.


ஒப்பற்ற விம் பளபளப்பு
உங்களுக்கு இப்போது
55 பைசா பேக்கெட்டிலே
நீங்கள் அறிந்த விம். பிசுக்கோ, கிறலோ, கசடோ எதனையுமே அணுவளவும் படிய விடாத அதே நுரைவளம், அதே அபார சக்தி. வந்துவிட்டது இன்று கையகலப் பேக்கெட்டிலே. துலக்கிப் பாருங்கள் எவர்ஸில்வர் பாத்திரங்களை— ஒரே ஒரு பேக்கெட் விம், நூற்றுக்கு மேற்பட்ட பாத்திரங்களைப் பளிச்சிட வைக்கும் ஒப்பற்ற ஒளிமயமாக— இத்தனைக்கும் 55 பைசாதான்.
Vim
with super foaming action
Cleans shining bright
பிசிறில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்!
தேர்ந்தெடுத்த ஒரு சில நகரங்களில் மட்டுமே கிட்டும்.
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.
லின்டாஸ்- V. 405-140 TM



''மாடர்னு டிரஸ் பண்ணிக்கத் தெரியாமெ இந்தச் சிறுசுகள் சுத்த 'கண்ட்ரி'யா இருக்கிறதுகளே !''

ஜன்னலருகே போய் நின்றாள். வெளிப் பார்வையில் அவள் லயித்து விட்டாள்.

ஏதோ சொல்வதற்கு அங்கே வந்த ராம் சந்த் கதவருகே அப்படியே நின்றான். இரு விளக்குகளின் ஒளிக்கு நடுவே அவள் உருவம் தெரிந்தது. அந்தக் கண்களில் இலேசான சோகம். காதருகே சுருண்டு அலைந்த கூந்தல் ஏதோ ஒரு மனத் துடிப்பைக் கதையாகச் சொல்வது போன்ற தோற்றம். ஒருபுறமாகச் செருகிய ரோஜாவிலிருந்து நைந்து உதிர்ந்த ஓரிரு இதழ்கள். உருவி விட்டது போன்ற புடவையில் அவள் வழுவழுப்பான கல்லில் செதுக்கிய சிலை போல் நின்றாள்.

''ஆஷா!''

அவன் குரலில் தெரிந்த மன அண்மை அவளை உலுக்கிற்று. அவள் பார்வை அவன் புறமாகத் திரும்பிற்று.

''இன்று காலையில் நான் ஷெஸ்சந்துக்கு 'போன்' செய்தேன். நீ இன்று மாலை இங்கே வர வேண்டும் என்பதாகச் சொன்னேன்.''

அப்படியா? ஷெஸ்சந்துக்கு எல்லாம் தெரியுமா? அப்படியானால் அன்று மாலை அவளிடம் அவன் பேசிய விதம்? அவளை முற்றிலும் வேறு இடத்துக்கு அழைத்த நோக்கம்? எல்லாம் காரணத்துடன்தானா?

அவன் அவள் அருகே வந்து நின்றான்.

''விரைவில் அவன் வெளிநாட்டுக்குப் போகப் போகிறான், பிஸினஸ் விஷயமாக. அநேகமாக அவன் மணந்து கொண்டு, தன் மனைவியுடன்தான் போவான். அது என் தாயின் விருப்பம். இந்தப் பயணம் ஒரு 'ஹனிமூன்' பிரயாணமாகவும் இருக்கும்.''

''யார் அந்தப் பெண்? நித்யாவா?''

''இல்லை ஆஷா. அவன் இப்போது மணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று சொல்லி விட்டான். அவனுக்கு அது ஓர் ஏமாற்றம்தான். ஆனால் அவன் மனத்தில் வேறு ஏதோ எண்ணங்கள் உருவாகிக்கொண்டிருக்கின்றன. என்னாலும் ஓரளவு புரிந்து கொள்ள முடிகிறது அதை.''

அவள் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்களில் ஒரு நிழலாட்டம்.

''அவனுக்குப் பதில் 'பிஸினஸை' இங்கே நான் பார்த்துக் கொள்ளப் போகிறேன். அங்கே மட்டும் அல்ல; இங்கேயும் நான் 'செட்டில்' ஆக வேண்டும் என்பது அம்மாவின் விருப்பம். நீ சொன்ன மாதிரி இருகப் பிரவேசமாகவே இருக்க வேண்டும் என்று அவளுக்கும் எனக்கும்கூட ஓர் ஆசை.''

ஆஷாவிடமிருந்து பதில் இல்லை.

''எது என்று நிச்சயம் செய்வது கடினமாக இருக்கிறதா ஆஷா?''

அவள் வியப்புடன் திரும்பினாள். அவள் முகம் கனிவில் குழைந்தது.

''நான் போன் செய்தபோது ஷெஸ்சந்த் இன்று மாலை உன்னிடம் பேசப் போவதாகச் சொன்னான். இன்று உன்னைக் கேட்கப் போவதாகச் சொன்னான். நீ இங்கே வருவாயோ என்றுகூட எனக்குச் சந்தேகமாக இருந்தது. நீ வந்து விட்டாய். இங்கே இப்போது உன் கைத் திறமை மணந்து கொண்டிருக்கிறது. அம்மா எதிர்பார்த்தது வீண் போகவில்லை.''

''ராம்சந்த்!''

''சொல்லு ஆஷா! உன்னுடைய முடிவுதான் என்ன? இரண்டு மாதங்களில் விமானப் பயணமும் ஸ்விட்ஜர்லாந்தில் தேனிலவுமா? அல்லது எளிய முறையில் இங்கே இருகப் பிரவேசமா?''

அது மண்ணில் வாழும் செடி. இயற்கையான நிலத்தில் வேர் ஊன்றி வளருவதுதான் அதன் இயல்பு. தொங்கும் பூச்சட்டியிலிருந்து கிண்ணத்தில் ஊற்றும் நீரில் அளவாக வளர்ந்து, வெய்யில் காணாமல் வளரமுடியாது. அது அதன் இயற்கை அல்ல.

அவள் கை அவனுடைய கையை நாடி அதனுள் அடக்கமாகப் புகுந்து கொண்டது. பரிவுடன் அவன் தோள்மீது சாய்ந்து கொண்டாள்.

அவன் பதில் சொல்லத் தேவையில்லை.

நாட்டின் மின் உற்பத்திக் கருவிகளுக்கான தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் போபாலில் உள்ள ஹெவி எலெக்டிரிகல்ஸ், ஹரித்வார், ஹைதராபாத், திருச்சிராப்பள்ளி ஆகிய நகரங்களில் அமைந்துள்ள பாரத் ஹெவி எலெக்டிரிகல்ஸ் ஆகியவை தயார் நிலையில் உள்ளன — இன்றைய தேவைகள் மட்டுமின்றி, அடுத்துவரும் ஐந்தாண்டுத் திட்டத்தின் தேவைகளை கூடப் பூர்த்தி செய்யும் வகையிலும்தான்.

1974ல் மின் உற்பத்தித் திறன் 20 MKW ஆக உயர்ந்து இருக்கும். 1950-51ல் உற்பத்தியான 2.30 MKWவிருந்து இது குறிப்பிடத் தகுந்த அதிகரிப்பாகும்.

திட்டக் கமிஷன், மத்திய நீர்-மின் கமிஷன், பல்வேறு மாநிலங்களின் மின்சார வாரியங்கள் ஆகியவற்றின் முன் நோக்கும், திட்டமிட்ட முயற்சியுமே இந்தத் திறனை அடைய உதவியுள்ளது.

1978-79ம் ஆண்டு இறுதியில் மின் உற்பத்தித் திறன் சுமார் 40 MKW ஆக இருக்க வேண்டும் என மதிப்பிடப்பட்டுள்ளது.

இந்த நிலையை எட்ட, மேலும் அதிக எண்ணிக்கைகளில் மின் உற்பத்திக் கருவிகள் தேவைப்படும். அனல் மற்றும் அணு மின் நிலையங்களுக்கான ஸ்டீம் ஜெனரேட்டர்கள், ஸ்டீம் டர்பைன்கள், ஹைட்ரோ டர்பைன்கள், பவர் செட்கள், டர்போ கம்ப்ரெஸர்கள், டர்போ ப்ளோயர்கள், இன்டஸ்ட்ரியல் மற்றும் பாக்கேஜ் பாய்லர்கள், ஸ்விட்ச் கியர்கள், டிரான்ஸ்ஃபார்மர்கள், டிராக்ஷன் மெஷின்கள், ஹெவி ரொட்டேட்டிங் பிளாண்ட்டுகள் ஆகியவை தேவைப்படும்.

இந்தத் தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்யும் வகையிலேயே பாரத் ஹெவி எலெக்டிரிகல்ஸூம், ஹெவி எலெக்டிரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட்டும், போபால், ஹரித்வார், ஹைதராபாத், திருச்சிராப்பள்ளி ஆகிய நகரங்களில் தங்களை முழுமையாகத் தயார் நிலையில் அமைத்துக் கொண்டுள்ளன. இந்த ஒவ்வொரு தொழிலகத்திலும் உற்பத்தி, விற்பனை, லாபம் ஆகியவை 1971-72ஐ விட 1972-1973ல் கணிசமாக உயர்ந்துள்ளன.

பாரத் ஹெவி எலெக்டிரிகல்ஸ், ஹெவி எலெக்டிரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட் இரண்டும் 1972-73ல் 1.1 MKW உற்பத்தித் திறன் கொண்ட 8 ஹைட்ரோ செட்டுகளையும், 7 தெர்மல் செட்டுகளையும் தயாரித்தளித்துள்ளன. அது மட்டுமின்றி, 1973-74ல் 2 MKW உற்பத்தித்திறன் கொண்ட மின் உற்பத்திக் கருவிகளையும் தயாரித்தளிக்கத் திட்டமிட்டுள்ளனர்.

இதைவிட முக்கியமாக, பாரத் ஹெவி எலெக்டிரிகல்ஸ் லிமிடெட், ஹெவி எலெக்டிரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட் இரண்டும் 3.5 MKW உற்பத்தி திறன் கொண்ட மின் கருவிகளை ஆண்டுதோறும் தயாரித்தளிக்கும் ஆற்றலைப் பெற்றுள்ளன. இப்போதே 10.5 MKW உற்பத்திக்குத் தேவையான கருவிகளுக்குரிய ஆர்டர்கள் உள்ளன. இருப்பினும், பாரத் ஹெவி எலெக்டிரிகல்ஸ், ஹெவி எலெக்டிரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட் இரண்டும் இதைவிட இன்னும் பெரிய ஆர்டர்களைப் பூர்த்தி செய்யும் ஆற்றல் கொண்டுள்ளன.

# சக்தியின் ஆணைக்கு என்றும் கீழ்ப்பணிகிறோம்

# பெண் பார்க்க வந்தது யார்?

கே. ஜெயலக்ஷ்மி

**மா**லைச் சிற்றுண்டி முடிந்ததும் கிரிக்கெட் மட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினான் ரகு.

செய்தித் தாளைப் புரட்டிக் கொண்டிருந்த சாந்தமூர்த்தி, ''ரகு! நாளைக்கு அவர்கள் வீட்டுக்குப் பெண் பார்க்க வருவதாகத் தெரிவித்திருக்கிறேன். நீ வேறு ஏதாவது 'புரோக்ராம்' வைத்துக் கொண்டு விடாதே'' என்று கூறினார்.

குப்பென்று செம்மை பரவிய முகத்தைச் சற்றே தாழ்த்தியபடி சிறிது நாமமிந்த ரகு, ''சரி மாமா !'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

மறு நாள் மத்தியானம் விசுவிடம், ''விசு ! நீயும் வர வேண்டும்'' என்று கூறினான் ரகு.

''என்ன விஷயம்...? எங்கே வரவேண்டும் ரகு?'' என்று புரியாமல் கேட்டான் விசு.

''பெண் பார்க்க.''

''ஐ....ஸீ ! பெண் யார்....?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது விசு. மாமா போக வேண்டும் என்று சொன்னார். நான் புறப்படுகிறேன். அவ்வளவுதான்'' என்று இயல்பாகக் கூறினான் ரகு.

''நான் அவசியம்தானா ரகு? எதற்கு வீண் கூட்டம்?''

'' என்னடா, இப்படிச் சொல்கிறாய்? நீ இல்லாமல் நான் எங்கேயாவது போயிருக்கிறேனா...? முக்கியமாக இந்த இடத்துக்கு நீ கட்டாயம் வந்துதான் ஆகவேண்டும்....''

''சரி, வருகிறேன்....'' என்று ஒப்புக் கொண்டான் விசு.

**ஒ**ரு மணிக்கே உடைகளைத் தேர்ந்தெடுத்து வைத்துவிட்டு 'டிரஸ்' செய்து கொள்ளத் தொடங்கினான் ரகு.

''ரகு! நான் தயார்!'' என்றவாறே அறைக்குள் நுழைந்தான் விசு.

''டேய் விசு ! நீ இந்த டிரஸ்ஸையா செலக்ட் பண்ணியிருக்கிறாய்? சரி, நானும் இதையே போட்டுக் கொள்கிறேன்....'' என்று சொல்லிக் கொண்டே தான் ஏற்கனவே தேர்ந்தெடுத்து வைத்திருந்த பாண்டையும் சிலாக்கையும் எடுத்துப் பீரோவுக்குள் வைத்துவிட்டு விசு அணிந்திருந்த வண்ணத்திலேயே பாண்டையும் சிலாக்கையும் எடுத்து அணிந்து கொள்ளத் தொடங்கினான் ரகு.

'' ரகு ! என்னடா இது ! நீ மாப்பிள்ளையாகப் போகிறவன்டா. கொஞ்சம் கூடுதலான 'டிப்டாப்'போடு வரவேண்டாமா ?''

''அதெல்லாம் இல்லே. நாம் இருவரும் எங்கே போனாலும் ஒரே மாதிரியான உடைகளை அணிந்து கொண்டுதானே செல்வது வழக்கம்.....? இன்று மட்டும் எதற்காக அந்த விதியை மாற்றிக்கொள்ள வேண்டும் விசு.....?'' என்றான் ரகு. அதன்படியே அணிந்து கொண்டும் புறப்பட்டான்.

விசு சாந்தமூர்த்தியின் ஒரே மகன். ரகு அவருடைய சகோதரியின் மகன். பிறக்கும் போதே தாயாரையும், பிறந்த சில மாதங்களில் தகப்பனாரையும் இழந்துவிட்டு மாமாவிடமே அடைக்கலமாக அடைந்தவன். பொருளாதார ரீதியில் அவனுக்கு ஒன்றும் குறையில்லை என்றாலும் அன்புக்கும் ஆதரவுக்கும் ரகு ஏழையாகிப் போனான். அவன் மீது எல்லையற்ற அன்பு கொண்டு அவனைத் தம்மிடமே வைத்துக்கொண்டார் சாந்தமூர்த்தி.

விசுவைவிட ரகு ஒரு வயது பெரியவன். சாந்தமூர்த்தி ரகுவைத் தம் மகனைப் போலவே எண்ணிப் பராமரித்து வந்தார். எது செய்தாலும் இருவருக்கும் ஒரே சமயத்தில் ஒரே மாதிரிதான் செய்வார். பார்க்கிறவர்கள் அவர்களைச் சாந்தமூர்த்தியின் இரட்டைப் பிள்ளைகள் என்றே கருதும்படியாக இருக்கும். இருவரையும் பி. ஏ. படிக்க வைத்தார். வயசு வித்தியாசம் காரணமாக ரகு ஒரு வருஷம் முன்னதாகப் படிப்பை முடித்துக் கொண்டு வேலையில் அமர்ந்துவிட்டான். விசு வேலையில் அமர்ந்து ஒரு வருடம்தான் ஆயிற்று.

முதலில் ரகுவுக்குத் திருமணத்தை முடித்துவிடத் தீர்மானித்தார் சாந்தமூர்த்தி. அதன் முன் ஏற்பாடுதான் பெண் பார்க்கப் புறப்படுவதும்.

பெண் பார்க்கும் படலம் முடிந்தது. பெண் அபர்ணாவை ரகுவுக்கு ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது. மாமாவோ — மாமியோ கேட்டால் உடனே தன் விருப்பத்தைத் தெரிவித்துவிடத் தயாராகவும் இருந்தான் அவன்.

டிபன், காப்பி சாப்பிட்டானதும் கையைக் கழுவுவதற்காக 'வாஷ் பேசின்' அருகில் சென்றான் ரகு. அப்போது ஒரு வாண்டுப் பயல் ஒரு துண்டுக் காகிதத்தை அவன் கையில் திணித்துவிட்டு உள்ளே ஓடிவிட்டான். ஒரு நிமிடம் ரகு திக்குமுக்காடிப் போய்விட்டான். பிறகு ஒரு மாதிரியாகச் சமாளித்துக் கொண்டு தன் இருக்கைக்குச் சென்று அமர்ந்தான். எல்லோரும் இருக்கும்போது அந்தக் காகிதத்தைப் பிரித்துப் பார்க்க முடியவில்லை. அதனால் அதைப் பாண்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டான். பிறகு விசுவின் பக்கம் திரும்பினான்.

'எப்போதும் ஏதேனும் கேலிப் பேச்சுக்களைப் பேசியபடி எந்நேரமும் கலகலப்பாக இருக்கும் விசு இன்று ஏன் முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டிருக்கிறான்?' என்று புரியாமல் விழித்தான் ரகு. இருப்பினும் தன் உள்ளத்தில் ததும்பி வழியும் உற்சாகத்தை அவனிடம் பகிர்ந்துகொள்ள வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

''விசு ! பெண் எப்படிடா ?'' என்று மெல்லிய குரலில் கேட்டான் ரகு.

உதட்டைப் பிதுக்கிவிட்டுக் 'கம்'மென்று இருந்துவிட்டான் விசு.

எப்படியோ ஆகிவிட்டது ரகுவுக்கு. 'இவன் ஏன் இப்படி இருக்கிறான் இன்றைக்கு?' என்று மறுபடியும் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டான். ஒன்றும் விளங்கவில்லை.

வீட்டை அடைந்ததும் தன் அறைக்குள் போய் உடனே பாண்ட் பாக்கெட்டிலிருந்து காகிதத்தை எடுத்துப் பார்த்தான் ரகு.

''டியர் விசு,

என்ன இப்படி என்னைக் கலவரப்படுத்தி விட்டீர்கள்? இப்படியா இரண்டு பேரும் ஒரே மாதிரி டிரஸ் செய்து கொண்டு வருவது? கால் ஷூ முதல் கைக் கடிகாரம் வரையில் எல்லாம் ஒரே வர்ணம். ஒரேமாதிரி டிஸைன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்னைப் பெண் பார்க்க வந்திருப்பது நீங்கள்தான் என்று சொன்னேன் நான். என் பெற்றோர்களோ என்னைப் பெண் பார்க்க வந்திருப்பது உங்களுடன் கூட வந்திருக்கும் ரகு என்பவர்தான் என்று சொல்கிறார்கள். எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. தயவுசெய்து உடனே உண்மையை விளக்கவும்.

உங்கள்
அபர்ணா.''

கடிதத்தை மடித்துப் பாண்ட் பாக்கெட்டில் போட்டான் ரகு. காற்றுப் போன பலூன் மாதிரி அவன் உள்ளம் சப்பென்று வடிந்து போயிற்று. அபர்ணாவின் எழிலார்ந்த முகம் அவன் மனக் கண் முன் வந்து நின்று அவனைக் கேலி செய்வது போலிருந்தது. விசுவின் களையிழந்த முகமும், மாறுதலான நடவடிக்கையும் ரகுவுக்குப் பல விஷயங்களை விளக்கிக் காட்டின. அவன் உடை மாற்றிக் கொள்வதற்குள் மேலே ஏறி வந்துவிட்டாள் மாமி மங்களம்.

'' ரகு! உனக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறது அல்லவா? அவர்களுக்குப் போன் செய்துவிடலாமா என்று கேட்கிறார் உன் மாமா!'' என்றாள் மங்களம் மூச்சு வாங்க.

மாமியின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான் ரகு. அவனுக்குத் தன் தாயின் முகம் தெரியாது. ஆனால் தாய்ப்பாசத்தை அவன்



உணராதவனல்ல. மங்களத்தினிடம் அவனுக்குத் தாய்ப் பாசத்துக்கு என்றைக்குமே குறைவில்லே. அவன் முகம் மௌனமாகத் தாழ்ந்தது.

''வெட்கமாக இருக்கிறதா ரகு ? இந்தக் காலத்தில் பெண்கள்கூட வெட்கப்படுவதில்லே. நான் மாமாவிடம் சொல்லிவிடுகிறேன். கல்யாண சீக்கிரம் என்பார்கள்.... எனக்குப் பெண்ணே ரொம்பப் பிடித்திருக்கிறது. உனக்கும் பிடித்துத்தான் இருக்கும்'' என்று சொல்லிக் கொண்டே கீழே இறங்கப் போனுள் மங்களம்.

''மாமி! எனக்குப் பிடிக்கவில்லே.'' எப்படியோ சொல்லி விட்டான் ரகு.

''பிடிக்கவில்லேயா?'' திரும்பி உள்ளே வந்தாள் மங்களம். ''ஏண்டா, பிடிக்கவில்லே ரகு ! பெண் நன்ருகத்தானே இருக்கிறுள்?''

''என்னமோ... தெரியவில்லே.... மாமி. எனக்கு வேண்டாம்.... விசுவுக்கு வேண்டுமானுல் பாருங்கள்.....''

ஐந்து நிமிடங்கள் சிலேயாக நின்றுவிட்டாள் மங்களம். பிறகு, ''இதுதான் உன் முடிவா ரகு?'' என்று வினவினுள்.

ரகுவுக்கு வேதனேயாகத்தான் இருந்தது. இருப்பினும் வேறு வழி?..... தலேயை அசைத்துத் தன் முடிவை உறுதிப்படுத்தினுன். இதயத்தில் குடி புகுந்தவளே மறு விநாடியே அப்புறப்படுத்த வேண்டியிருந்தால் அது எவ்வளவு வேதனேக்குரியது ?

சிறிது நேரம் எதுவுமே பேசத் தோன்ருமல் உட்கார்ந்திருந்தார் சாந்தமூர்த்தி. பிறகு தான் கேட்டார் : ''நிஜமாகத்தான் சொல்கிருயா மங்களம்?''

''எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. இந்தக் காலத்துப் பிள்ளேகளின் குணமே அலாதியாகத்தான் இருக்கிறது....''

''நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லே. ராமதுரையிடம் நான் நம்பிக்கையோடுதான் சொல்லிவிட்டு வந்தேன். இப்போது எப்படி இல்லே என்று சொல்வது.....? என் கண்களுக்கு அந்தப் பெண்ணிடம் ஒரு குறையும் தெரியவில்லே'' என்று சங்கடப்பட்டார் சாந்தமூர்த்தி.

''எனக்கும் அந்தப் பெண்ணே ஒதுக்கிவிட மனமில்லே. மனிதர்களும் ரொம்ப நல்ல மாதிரியாக இருக்கிருர்கள்.....''

''நான் வேண்டுமானுல் சொல்லிப் பார்க்கட்டுமா ?''

''எதற்காக ? வற்புறுத்திச் சாதிக்கிற காரியமா இது..... ?''

''ரகுவா இப்படிச் சொல்கிறுன்? என்னுல் நம்பவே முடியவில்லேயே..... வேறு ஏதேனும் காரணமாக இருக்குமோ....?''

''என்னவாக வேண்டுமானுலும் இருந்துவிட்டுப் போகட்டும். எனக்கு ஒரு யோசனே தோன்றுகிறது.....'' என்ருள் மங்களம்.

''விசுவுக்குப் பார்க்கலாம் என்பாய்....''

''ஏன், பார்த்தால் என்னவாம்.....?''

''அவன் என்ன சொல்கிருனே....?''

''கேட்டுப் பார்த்துவிடலாமே! அவனிடம் கொஞ்சம் அழுத்தமாகச் சொல்ல முடியும்.''

''பெரியவனுக்குப் பண்ணுமல் சின்னவனுக்கா.....?''

''அதெல்லாம் ஒரு......''

''புரிகிறது மங்களம். கேட்டுப் பார். உன் ஆசையையும்தான் கெடுப்பானேன் ?''

மங்களம் விசுவைத் தேடி விரைந்தாள்.

பாரத் கபேயின் வாயிலில் காத்திருந்தாள் அபர்ணு. ஓட்டமும் நடையுமாக வந்து சேர்ந்தான் விசு.

''சந்தோஷம்தானே ? ஸ்வீட் சாப்பிடலாம் வா !'' என்று உரிமையோடு கையைப் பற்றினுன் விசு.

''கொஞ்சம் இருங்கள். இன்று காலேயில் உங்கப்பாவிடமிருந்து போன் வருகிற வரையில் நான் எப்படித் தவித்துப் போய்விட்டேன் தெரியுமா ? ஆமாம்.... என் கடிதத்துக்கு ஏன் பதில் தரவில்லேயாம்?''

பொரிந்து கொட்டினுள் அபர்ணு.

''கடிதமா ? ஏது கடிதம்.....?'' குழம்பி விட்டான் அவன்.

''நேற்று நீங்கள் எல்லோரும் என் வீட்டுக்கு வந்திருந்த போது யாருக்கும் தெரியாமல் என் தம்பி உங்களிடம் ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுக்கவில்லே...?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் அவள்.

அவன் இரண்டு கைகளேயும் விரித்தான்.

''யாம் அறியோம் பராபரமே !''

''விளேயாடுகிறீர்களா ? பிளாக் பாண்ட், வைட் ப்ளு ஷெர்ட், கருட்டைத் தலே முடி.... என்று அடையாளம் சொன்னேனே என் தம்பியிடம். அவனும் 'அவரிடம்தான் கொடுத்தேன்' என்று சொன்னுனே.....''

''அதெல்லாம் எங்கள் ரகுவுக்கும் பொருந்துமே.....''

''அட கடவுளே!''

''நன்றி சொல்ல வேண்டும். வருகிருயா?''

''யாருக்கு?''

''ரகுவுக்குத்தான்.... உன் தம்பி தவருதலாகக் கடிதத்தை ரகுவிடம் கொடுத்தானே நாம் பிழைத்தோம்.... இல்லாவிட்டால்.... ரகுவாவது உன்னேப் பிடிக்கவில்லே என்று சொல்வதாவது.......''

''அப்படியானுல் பெண் பார்க்க வந்தது?''

''ரகுதான் !''

அபர்ணு செதுக்காத சிலேயாக நின்ருள்.

''நாளேக்கே உன் தம்பிக்கு ஒரு கைக் கடிகாரம் வாங்கிக் கொடுக்க வேண்டும்.'' சொல்லியவாறே அவளே இழுத்துக் கொண்டு பாரத் கபேக்குள் நுழைந்தான் விசு.

இடது கையில் பாண்டும் வலது கையில் துண்டுக் காகிதமுமாகக் கணவரிடம் ஓடி வந்தாள் மங்களம். ''இதைப் பார்த்தீர்களா ? ரகுவின் பாக்கெட்டில் இருந்தது. ''காகிதம் கை மாறியது. அதைப் படித்துப் பார்த்துவிட்டு நிமிர்ந்தார் சாந்தமூர்த்தி.

''உன் பிள்ளேயின் அவசரத்தைப் பார்த்தாயா ?''

''அப்பாவைக் கொண்டிருக்கிருன்....''

''கேலி செய்கிருயா.....?''

''க்ஹும்..... பாவம், ரகு! நான் அவனேப் பற்றித் தப்பாக நினேத்துவிட்டேன்'' என்ருள் மங்களம். சாந்தமூர்த்தியின் முகத்தில் நிம்மதி நிலவியது. ''முதலில் ரகுவுக்குத்தான் திருமணம் நடக்க வேண்டும். அதுவரையில் விசு காத்திருக்கத்தான் வேண்டும்'' என்ருர் அவர்.




Printed & Published by R. Anantharamavanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam.

# வாழ்க்கை உணர்ச்சி மயமானது



## 'க்ளிக்' அடித்துவைப்பீர்...நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III. மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்— நினைவுகூரும் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயார்த் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).



தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லிவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • புது டெல்லி • கல்கத்தா • சென்னை

® புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/லிவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்.

ஆக்பா க்ளிக்— இந்தியாவின் உன்னதப் புகழ்பெற்ற காமிரா.

Simoes/AG/18CTam

